# என் தமிழ்ப்பணி

புலவர்

கா. கோவிந்தனார்

எழிலகம்

# நூல் விவர அட்டவணை


நூலின் பெயர் : என் தமிழ்ப்பணி

ஆசிரியர் : புலவர் கா. கோவிந்தனார்

முதற்பதிப்பு : டிசம்பர், 1997

உரிமை : பதிப்பகத்தாருக்கு

வெளியீடு : எழிலகம்
46, செல்வ விநாயகர் கோயில் தெ
திருவத்திபுரம் (செய்யாறு)
திருவண்ணாமலை மாவட்டம்
604407
தொ. எண்: 04182 22255

சென்னை முகவரி : 17/12 பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்
தொ. எண் : 8528340

நூலின் அளவு : கிரவுன் 1×8

தாளின் தன்மை : 10.5 வெள்ளைத்தாள்

பக்கங்கள் : 140

அச்சுப்புள்ளி : 10 புள்ளிகள்

---

**விலை ரூ. 25-00**

---

அச்சிட்டோர் வெற்றி அச்சகம்
91, டாக்டர் பெசன்ட் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-14.

ISBN. 81. 85703-01-7.

# பதிப்புரை

இருபதாம் நூற்றாண்டுத் தமிழகத்தின் வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெறத்தக்க வகையில், நல்ல தமிழ் அறிஞராக, வரலாற்றுத் திறனாய்வாளராக, செந்தமிழ்ப் பேச்சாளராக, இலக்கியப் படைப்பாளராக, பாதை மாறாத பகுத்தறிவுவாதியாக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக, தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் தலைவராக, என பல்திறன் படைத்த நற்றமிழ்ப் புலவராக விளங்கியவர்,

புலவர் கா. கோவிந்தனார் அவர்கள்

"தமிழுக்கும், தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ்நாட்டுக்கும் தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்" என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப்பெற்ற பேறு பெற்றவர், பைந்தமிழ்ப் புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக் கண்கொண்டு ஆய்ந்து, தொல்காலத் தமிழர் வாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தென்தமிழ்ச் சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமை உடையவர்.

புலவர் கா. கோவிந்தனார் அவர்கள்.

புலவர்களுள் பெரும் புலவராய் விளங்கி, திருவண்ணாமலை குன்றக்குடி ஆதீனத்தாரின் 'புலவரேறு' பட்டம். தமிழக அரசின் 'திரு.வி.க. விருது', மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' பட்டம் போன்றச் சிறப்புகளைப் பெற்றபுலவர் அவர்களின் 'தமிழ்ப்பணி' பொன்விழாக் கண்ட பெருமையினை யுடையது.

'என் தமிழ்ப்பணி' என்ற தலைப்பில், புலவர் எழுதிய கடைசி கட்டுரையில், "என் எழுத்துப் பணி தொடரும். குறள் பற்றி, சங்க இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன். "கல்வி கரையில, கற்பவர் நாள் சில" காலம் இடம் தந்தால் என் எழுத்துப் பணி தொடரும்" என்று அவர் தம் தமிழ்ப் பணியைத் தொடர வேண்டும் என்ற தணியா ஆவலை வெளியிட்டுள்ளார். ஆனால், காலம் இடம் தரத் தவறிவிட்டதனால், முற்றுப்பெறாத நிலையிலே அவருடைய எழுத்துப் பணி எச்சமாகவே நின்று போயிற்று! காலம் செய்த கொடுமை அது!

தமிழால் உயர்ந்து, தம் தமிழ்ப்பணி மூலம் தமிழுக்கும் உயர்வு தேடித் தரும் வகையில் எழுத்துலகம் நினைவு கொள்ளும் வண்ணம் நூற்பணி யாற்றிய புலவர் அவர்கள், 'செத்தும் பொருள் கொடுத்த சீதக்காதி வள்ளல்' போலத் தம் மறைவிற்குப் பின்னும் தமிழுக்கு அணி செய்யும் வகையில் பல இலக்கியப் படைப்புகளைத் தம் கையெழுத்து வடிவிலே அளித்துச் சென்றுள்ளார்.

அந்த எழுத்துச் சுவடிகளையெல்லாம் அச்சு வடிவில் வெளியிடுவதைத் தன் தலையாய கடமையாக எழிலகம் ஏற்று,

"வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி"

"மனையுறை புறாக்கள்"

"பெரும்பாணாற்றுப்படை—விளக்கவுரை"

"புலா அம் பாசறை"

ஆகிய இலக்கிய நூல்களையும்,

தமிழக வரலாறு—வரிசை என்ற தலைப்பில்,

"தமிழக வரலாறு—சங்ககாலம்—அரசர்கள்"

"தமிழக வரலாறு—கோசர்கள்"

"தமிழக வரலாறு—கரிகாற்பெருவளத்தான்"

ஆகிய வரலாற்று நூல்களையும் வெளியிட்டுள்ளோம்.

புலவர் அவர்கள் விட்டுச் சென்றுள்ள, அச்சு வடிவம் பெறாத அவருடைய இலக்கியக் கட்டுரைகளைத் தொகுத்து இன்று,

"என் தமிழ்ப்பணி"

என்ற இக்கட்டுரைத் தொகுப்பைத் தமிழ்கூறு நல்லுலகத்தின் முன் படைக்கிறோம்.

"மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே"

என்ற புறநானூற்று மொழிகளுக்கேற்ப, புகழுடம்பு பெற்றுவிட்ட புலவர் பெருந்தகை, இறவாத புகழுடைய இலக்கியங்கள் பலவற்றைத் தமிழன்னைக்கு

அணி செய்ய அளித்துவிட்டுச் சென்றுள்ளார். புலவர் அவர்களின் முன்னைய படைப்புகளுக்குத் தமிழகத்துப் பெரியோர்களாகிய தாங்கள் காட்டிய பேரன்பையும், பாராட்டையும், ஆதரவையும் தொடர்ந்து அளித்திட வேண்டுகிறோம்.

"தமிழுக்குத் தொண்டு செய்வார் சாவதில்லை" என்றார் பாவேந்தர். தம் வாழ்நாள் முழுவதும். காலம் கரம் பிடித்து அழைத்துப் போன அந்தக் கடைசி நொடி வரை, தமிழ்ப் பணி ஆற்றிய புலவர் அவர்கள் வாழ்வார்; அவர் தமிழ் உலகிற்கு அளித்துச் சென்றுள்ள இலக்கியச் செல்வங்கள் உள்ளவரை என்றென்றும் நிலைத்து வாழ்வார்; தமிழறிந்தோர் நெஞ்சமெல்லாம் நிலைத்து வாழ்வார் என்பது உறுதி!

—எழிலகம் பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# 1. என் தமிழ்ப்பணி

## என் கடன் பணி செய்து கிடப்பதே!

1932: செய்யாறு உயர்நிலைப் பள்ளியில் 8-வது வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறேன். தமிழாசிரியர், உயர் திருவாளர், மகாவித்துவான் வீரபத்திரப் பிள்ளை அவர்கள். எங்கள் ஊரில் பானு கவியார் என்ற பெரும் புலவர், துறவியார் இருந்தார். வடலூரர் வள்ளலார் இயற்றிய அருட்பா குறித்து எழுந்த "அருட்பா, மருட்பா' வாதத்தில் அருட்பாவாத நெறியாளரோடு நின்று வாதிட்ட வன்மையாளர். எங்களூரில் கோயில் கொண்டிருக்கும் அருள்மிகு வேதபுரீஸ்வரர், திருஞான சம்பந்தர் அவர்களால், ஆண்பனை பெண்பனையாகப் பாடப் பெற்ற பெருமைக்குரிய பெருமான். அவர் துணைவியார் பாலகுஜாம்பிகையார், அந்த அம்மையார் மீது "இள முலை நாயகிப் பிள்ளைத் தமிழ்" என்ற பொருள் செறிந்த நூலைப் பாடியவர் பானு கவியார். அத்தகு பெரும் புலமை வாய்ந்த பானுகவியாரை வாதத்தில் வென்றவர் திரு வீரபத்திரப்பிள்ளை அவர்கள்.

அவர் வேலூரில், இன்று வெங்கடேசுவரா மேல் நிலைப் பள்ளி என் அழைக்கப்பெறும் அன்றைய ஸ்ரீமகந்து தேவஸ்தான உயர்நிலைப் பள்ளிக்குச் சென்று விட்டார்

புலவர் அவர்கள் கடைசியாக எழுதிய கட்டுரை.

அவர் இடத்திற்குக் காவேரிப்பாக்கம் உயர்நிலைப் பள்ளியில் பணி புரிந்திருந்த திரு. ஒளவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் வந்து சேர்ந்தார். தென் ஆர்க்காடு மாவட்டம். மயிலத்துக்கு மேற்கில் பத்து கி. மீ. தொலைவில் உள்ள ஒளவையார் குப்பம் என்ற ஊரில், அவ்வூர்க் கணக்கு எழுதி வந்த திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் மகனாகப் பிறந்தமையால் ஒளவை சு. துரைசாமிப் பிள்ளை என அழைக்கப்பட்டவர்.

மகாவித்துவான் வீரபத்திரப் பிள்ளை அவர்கள் எங்கே, இவர் எங்கே, எனச் சில நாள் இவரை மதிக்காமலே இருந்த மாணவர்களில் நானும் ஒருவன். ஆனால் ஒளவை அவர்களின் பாடம் நடத்தும் முறை புதுமையானது. அன்று நடத்த வேண்டிய பாடத்திற்கான குறிப்புகளை முன்பாகவே தேர்வு கொண்டல்லது பாடம் எடுக்க மாட்டார்; பாக்களை இசையோடு பாடுவார்; சொல் பிரித்து பொருள் விளங்கப் பாடுவார்; புதிய பாடம் எடுத்துக் கொள்வதற்கு முன்னர் பழைய பாடத்தை மாணவர் எந்த அளவு புரிந்து கொண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்ள சில பல கேள்விகளைக் கேட்பார்.

அம்முறையில் ஒரு நாள் அரிச்சந்திர புராணத்தில் வரும் "அவமே புறம் அறைந்தமை" என்ற தொடரில் வரும் "அறைந்தமை" என்ற சொல்லுக்குச் சொல்லிலக்கணம் கூறுமாறு கேட்டார். அதுவரை இலக்கணம் என்றால், இலக்கணத்திற்குப் பாடமாக வைத்திருக்கும் நூலில் ஒரு பக்கம் இரண்டு பக்கங்களை ஒப்பிப்பதோடு சரி: அதனால் சொல்லிலக்கணம் என்பது என்ன எனப் புரியாமல் விழித்தோம். அவர் "இடவழுவமைதி தனித் தன்மைப் பன்மை" என்பதுதான் இதன் சொல்லிலக்கணம் என்றார்.

எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. 'இடமாவது, வழுவாவது அமைதியாவது, தனித் தன்மைப் பண்மையாவது'' என விழித்தோம். அதன் பிறகு. இவரிடம் நல்ல தமிழ் அறிவு இருக்கிறது என்பதை உணர்ந்து மதிக்கத் தொடங்கினோம்.

வகுப்பில் ஒருநாள் "என்னிடம் தமிழ் கற்க விரும்பும் மாணவர்கள் எழுந்து நிற்கலாம்'' என்றார். எல்லோரும் எழுந்து நிற்கவும், உடனே அவர், என்னிடம் படிப்பதானால், மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் கொடுக்க வேண்டும்! அதற்கு ஒப்புக் கொள்பவர் மட்டுமே நிற்கலாம் என்றார். நான், மா. கந்தசாமி, வ. வேதபுரி பி. குப்புராவ், ஆகிய நால்வர் மட்டுமே நின்றோம்.

மாலையில் வீட்டிற்குச் சென்றோம் பணத்தோடு! தமிழ் கற்க எந்த அளவு ஆர்வம் இருக்கிறது என்பதைக் கண்டு கொள்ளவே, ஐந்து ரூபாய் சம்பளம் என்றேன். சம்பளம் எதுவும் வேண்டாம் தமிழ் கற்றுத் தருகின்றேன் என்றார்.

வகுப்பு தொடங்கிற்று. திரு. உலகநாதம் பிள்ளை அவர்கள் இயற்றிய 'கன்றும் கனி உதவும்'' என்ற உரை நடை நூலைக் கொடுத்து, அதை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கப் பணித்தார். பாரி மகளிர் வரலாறு கூறும் சிறந்த உரைநடை நூல் இது. அது முடிந்ததும். "கார் நாற்பது'', "களவழி நாற்பது'' என்ற எளிய பொருள் விளக்கம் பெறவல்ல, அதே நிலையில் ஆழமான பொருள் நிறைந்த நூல்களைக் கற்றுத் தந்து விட்டுப், பின்னர் ஒருநாள் தொல்காப்பியம் சொல்லதிகாரம் ஃசேனா வரையம், ஒரு நாள் திருக்குறள் பரிமேலழகர் உரை எனச் சொல்லித் தந்தார்.

பாடம் தொடங்குமுன் :

திருவிளங்கு பலமொழியும் சீர்விளங்கு
புலவர் பலர் சிறப்பத் தோன்றி
உருவிளங்கு பாக்கள் பல உரைகள்
பல ஆக்குதநல் உளவாம் வாய்மை
மருவிளங்கு தமிழ் மொழியின் மருங்கு
எழுந்தது என விளங்கும்
திருவிளங்கு வள்ளுவனார் திருக்குறள் கண்டவர்
அடியைச் சிரமேற் கொள்வாம்.

என்ற பாடலை எல்லோருமாகப் 'பாடுவோம்.

1934-இல் பள்ளி இறுதி வகுப்பை முடித்ததும் அவர் தந்த பயிற்சியின் துணையால் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை நூல்களை நானே படிக்கத் தொடங்கினேன்.

1935-இல் "காவேரி" என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதி, தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடாகிய "தமிழ்ப் பொழி" லுக்கு அனுப்பினேன். அது வெளிவந்த பிறகே ஆசிரியர்க்குத் தெரியும். இதுவே என் எழுத்துப் பணியின் தொடக்கம்.

ஊரில் "வாகீச பக்த ஜன சங்கம்" என்ற பெயரில் ஒரு தமிழ்ச் சங்கம் இருந்தது. அது மேலே கூறிய திருக்கோயில் திருவிழா நடைபெறும் தைத்திங்களில் பத்து நாட்கள் உபயச் சொற்பொழிவு நடத்தி வந்தது. ஔவை அவர்கள் பங்கு கொண்டதும், அது புதுநடை போடத் தொடங்கி விட்டது. தமிழ்நாட்டில் உள்ள திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் உள்ளிட்ட பல சமயப் புலவர்கள் வந்து சொற்பொழிவு ஆற்றுவார்கள்.. அவர்கள் பேசியன எல்லாம் கேட்ட எனக்கும் "நாமும் ஏன் பேசக் கூடாது" என்ற உணர்வு எழவே, ஆசிரியர் அறிவுரையோடு "சைவ இளைஞர்கள் முன்

ணிற்கும் கடமைகள்" என்ற தலைப்பில் பேசினேன். அதுவே என் முதற் பேச்சு.

எங்கள் ஊரில் "பானு கவி மாணவர் தமிழ்ச் சங்கம்" என்ற பிறிதோர் அமைப்பும் இருந்தது. கம்ப இராமாயணத்தை ஆழ்ந்து படிக்காமலே பட்டிமன்றம், வழக்காடு மன்ற மேடைகளில் நின்று கொண்டு வெறும் சொல் சாலம் காட்டுவார் போல் அல்லாமல் ஆழமாகப் படித்து 'வாலி வழக்கு" என்பது போலும் அரிய நூல்களைப் படைத்த அமரர் திரு. புரிசை முருகேச முதலியார் போன்றவர்கள் பானு கவியாரின் மாணவர்கள். அவர்கள் உருவாக்கியது அச்சங்கம். அதிலும் நான் பங்குகொண்டவன் தான்; ஆண்டு தோறும் திருவத்திபுரத்திற்கு வந்து செல்லும் ஞானியார் அவர்கள் அயர்ந்து உறங்கத் தொடங்கும் போது, அவர் உறங்கும் வரை அவர் கால்களைப் பிடித்துவிடும் பழக்கமுடைய என்னை, ஒரு முறை அவர் தலைமையில் "மணி வாசகர் அளித்த இரு வாசகம்" என்ற தலைப்பில் பேசுமாறு பணித்து விட்டார்கள். சங்க இலக்கியங்களை ஓரளவு கற்றவனே அல்லது, சமய இலக்கியம் படித்தவன் அல்லன், ஆனாலும் திருக்கோவையாரில் ஒரு சில பாக்களைப் பள்ளியில் படித்தவன். என் தந்தையார் மார்கழி மாத விடியற் போதில் படிக்கும் திருவாசகப் பாக்களைக் கேட்டுக் கேட்டுச் சில பாடல்களை நினைவில் வைத்திருப்பவன். அதனால் தன் மகள் அவள் விரும்பும் இளைஞனோடு அவ்வூர் சென்று விட்ட போது, அவர்களைத் தேடிச் சென்ற தாய், எதிரே வந்த ஓர் இள ஆணையும் ஓர் இள மகளையும் அணுகி, உங்களைப் போன்ற இருவர் இவ்வழியில் செல்வதைக் கண்டீர் களா எனக் கேட்க, அதற்கு அந்த இளைஞன், ஒன்று இருவரையும் பார்த்தேன் அல்லது இல்லை எனக் கூறியிருக்க வேண்டும், ஆனால் அதற்கு மாறாக "என்னைப் போன்ற இளைஞனைப் பார்த்தேன்" எனக் கூறி விட்டுத் தன் பக்கத்தில் நிற்கும் தன் காதலியைப் பார்த்து, "இந்த அம்மா, வேறு

யாரோ ஒருவரைப் பற்றிக் கேட்கிறார்களே! அவர்களைப் பற்றி உனக்குத் தெரியுமா?'' எனக் கேட்டதாக வரும்,

''ஆளி அன்னானைக் கண்டேன், அயலே தூண்டா
விளக்கனையாய்? என்னையோ அன்னை சொல்லியதே''

என்ற பாட்டைப் பாடிவிட்டு, எதிரில் இருவர் வர, ஆணை மட்டும் பார்த்துப் பெண்ணைப் பார்க்காத அக்கால இளை ஞரின் நாகரீகம் எங்கே? அழகிய இளமகளிரை-எங்கெல்லாம் காணலாம் என அலைபாயும் உள்ளத்தோடு, மகளிர் கல்லூரி வாயில்களிலும், திரையரங்குத் திடல்களிலும் காத்துக் கிடக் கும் இன்றைய இளைஞரின் நாகரீகம் எங்கே எனக் கேட்டு முடித்தேன்.

அடுத்து ''தந்தது உன் தன்னை, கொண்டது என் தன்னை'' என்ற—திருவாசகத் தொடரை எடுத்துக் கொண்டு, தருதல் என்றால், கொடுப்பவன் தாழ்ந்து, வாங்கு வோன் உயர்ந்து நிற்கும் போது ஆளவேண்டிய சொல், இங்கு 'தந்தது உன் தன்னை' என கூறியதன் மூலம், சிவனைத் தாழ்ந்தவனாகவும், தன்னை உயர்ந்தவனாகவும் மதித்துள் ளாரே மணிவாசகர், இது ஏன் என்ற கேள்வியைக் கேட்டு விட்டுப் பேச்சை முடித்துக் கொண்டேன்.

தலைமையுரையில், ஞானியார் அவர்கள் ''கோவிந்தன் பேசிய நேரம் சிறிய நேரம் என்றாலும், என் சிந்தனைக்கு மட்டுமல்லாமல் அனைவர் சிந்தனைக்கும் அரிய வேலை கொடுத்து விட்டான்'' எனக் கூறிப் பாராட்டினார்.

மற்றுமொரு நிகழ்ச்சி: நான் வித்துவான் பட்டம் பெறாத நேரம். ஆசிரியர்பால் பின்னர் தமிழ் கற்க வந்த கோமான் ம. வீ. இராகவன் அவர்கள் அந்த ஆண்டு வித்து வான் தேர்வு எழுதியிருந்தார், அந்நிலையில் திருவத்திபுரத் திற்கு வருகை தந்த, எங்கள் ஆசிரியரின் ஆசிரியர் கரத்தைக்

கவியரசு ஆர் வெங்கடாசலம் பிள்ளை அவர்கள், இராகவன் தேர்வில் நன்றாக எழுதியுள்ளார். எனக் கூறினார். அது கேட்ட ஔவை அவர்கள் என்னைச் சுட்டிக் காட்டி, "இவன் அவனைவிடத் தெளிவாகப் படித்தவன்?" என்று கூறிச் சென்று விட்டார்.

கவியரசு அவர்கள் என்னை அருகில் அழைத்து அணைத்துக் கொண்டு, இலக்கியத்திலும், இலக்கணத்திலு மாகச் சில கேள்விகளைக் கேட்டார். கூடுமானவரை நல்ல விடையே கூறினேன். என் அறிவு எனக்குத் தானே தெரியும். மேலும் அவர் கேட்டால் விழிக்க வேண்டி நேரும். ஆசிரியர் நற்சான்றிற்கு மாக நேரக் கூடும் என்பதால் கவியரசை விட்டு ஓடி விடத் திட்டமிட்டு அவரிடம் ஓர் ஐயம் எழுப்பி னேன். "தொல்காப்பியர் எழுவாய் வேற்றுமைக்கு இலக் கணம் கூறும்போது எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே" என்றார். அதாவது சொல் எவ்விதத் திரிபும் இல் லாமல் இருப்பது. அவ்வாறு கூறிய அவரே 'நீயிர்' என்ற எழுவாய்ச் சொல்லுக்கு இலக்கணம் கூறும்போது "நும்மின் திரிபெயர்" என்று கூறியுள்ளார். இது முன் கூறிய இலக்க ணத்திற்கு முரண் ஆகாதா? நும்மின் திரி பெயராகிய நீயிர் என்பது பிற வேற்றுமைகளை ஏற்கும்போது மீண்டும் நும் எனத் திரிந்து, "நும்மை நும்மால்" என ஆவானேன் என்ற இரு ஐயங்களை எழுப்பினேன். அவர் சிந்திக்கத் தொடங்கி விட்டார். விட்டால் போதும் என ஓடி விட்டேன்.

பள்ளியில் மற்றொரு தமிழாசிரியர் திரு. பாலசுந்தர நாயகர் அவர்கள் வித்துவான் தேர்வில் வெற்றி பெற்றார். அதற்கு ஒரு பாராட்டு விழா நடத்த தலைமை ஆசிரியரின் அனுமதி கேட்டோம். அவர் மறுத்து விட்டார். பாணுகவி மாணவர் கழகமும் விழா நடத்த முன் வரவில்லை. அதனால் ஔவைத் தமிழ் மாணவர் கழகம் என்ற புதிய கழகத்தைத் தொடங்கி அவருக்கு மிகப் பெரிய பாராட்டு விழாவினை நடத்தினோம்.

ஓராண்டு கழிந்தது; 1936இல் முதலாண்டு விழா நடத்த முடிவு செய்தோம். விழாத் தலைமைக்கு மறைமலை அடிகளாரை அழைக்க முடிவு செய்தோம். ஆசிரியர் ஔவை அவர்கள் அவருக்கு கடிதம் எழுத, அடிகளார் ஒரு நாளைக்கு 100 வெண் பொற்காசுகள் (அதாவது ரூபாய்) தர வேண்டும் என்றும் உணவு இவ்வகையில் இருக்க வேண்டும் என்றும் பதில் எழுதி விட்டார்.

எங்களிடம் அவ்வளவு தொகை இல்லை; ஆனாலும் மறைமலையாரை அழைக்கும் ஆசையும் குறையவில்லை. ஒருநாள் ஆசிரியர் அவர்களிடமும் சொல்லாமல் பல்லாவரம் சென்று, அரைக்கிலோ கற்கண்டு, 2 சீப்பு வாழைப்பழம், வெற்றிலை, பாக்கு, மலர்மாலை இவற்றை வாங்கிக் கொண்டு அடிகளார் மாளிகை சென்று ஒரு தட்டு வாங்கி, அதில் இவற்றை வைத்து எடுத்துக் கொண்டு அவரிடம் சென்று அவர் கையில் தட்டைக் கொடுத்துவிட்டுக் காலில் வீழ்ந்து வணங்கினேன். (நான் வணங்கிய முதல்வர் அவர் தான்.)

வாழ்த்தி எழுந்திருக்கப் பணித்துவிட்டு, யார்? வந்தது ஏன் என வினவினார்: அழைக்க வந்தேன் என்றேன். ஔவைக்குக் கடிதம் எழுதி விட்டேனே என்றார். கையில் இருப்பது 200 வெள்ளிக் காசுகள்தாம் என்றாலும் தாங்கள் வந்து விழாத் தலைமை தாங்க வேண்டும் என வேண்டிக் கொண்டேன், ஒப்புக் கொண்டார்.

1936 மே 24, 25, 26 ஆகிய நாட்களில், திருவத்திபுரம் எங்கள் தெருவில், கோயிலை அடுத்து தெருவை அடைத்துப் பெரிய பந்தல் போட்டு விழா நடத்தினோம்.

வித்துவான் பட்டம் பெற்ற பின்னர் பி.ஓ.எல். பட்டம் பெற வேண்டும் என்ற ஆசை எழுந்தது. கல்லூரி சென்று படிக்காமல் வீட்டிலிருந்தே தேர்வு எழுதுவதானால் 3ஆண்டு

ஆசிரியராகப் பணி புரிந்திருக்க வேண்டும்; தேர்வுக்கு மனுச் செய்யும்போது ஆசிரியராக இருக்க வேண்டும் என்பது பல் கலைக் கழக விதி. அதனாலும், இரண்டாம் உலகப் போர் காரணத்தால் அறிஞர் அண்ணா உள்ளிட்ட கழகத்தவர் அனைவரும் போரில் அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷியா அணிக்கு ஆதரவான பிரசாரம் செய்ய முனைந்து விட்ட னர், அதனாலும், வேலூரில் என் பழைய தமிழாசிரியர் சென்ற அதே பள்ளியில் ஆசிரியராக 1942-இல் சேர்ந்தேன். 1944 வரை பணி புரிந்தேன். அங்கும் தமிழ்ப்பணி தொடர்ந் தது.

பி.ஓ.எல். தேர்வில் முதல் பகுதி பி.எஸ். வகுப்பிற்குரிய ஆங்கில இலக்கியம். இரண்டாம் பகுதி தமிழ் வித்துவான் தேர்வு, மூன்றாம் பகுதி திராவிட மொழி ஒப்பிலக்கணமும், தென்னிந்திய வரலாறும் (ஆங்கிலத்தில்). இரண்டாம் பகு தியை முன்னரே முடித்து விட்டேன். முதல் பகுதியையும் முடித்து விட்டேன். மூன்றாம் பகுதியில் தென்னிந்திய வர லாற்றுக்குரிய நூல்களாகிய திருநீலகண்ட சாஸ்திரியாரின் சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு, திரு. கோபாலன் அவர்களின் பல்லவ வரலாறு, திரு. பி.டி. சீனிவாச அய்யங் கார் அவர்களின் தமிழர் வரலாறு ஆகிய ஆங்கில நூல்களை வாங்கிக் கொண்டேன். கால்டுவெல் ஒப்பிலக்கணத்தை இலண்டனில் உள்ள தம் நண்பர் மூலம் வாங்கித் தந்தார் ஆசிரியர்.

அவற்றைப் படிக்கும்போது கால்டுவெல் ஒப்பிலக்கணத் தையும், பி.டி.எஸ். அவர்களின் தமிழர் வரலாற்றையும் தமிழில் மொழி பெயர்த்தால் பி.ஓ.எல். படிக்கும் மாணவர் களுக்குப் பயன்படும் என எண்ணினேன்.

வேலூரில் பணி புரிந்து கொண்டிருந்தபோது, தென் னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவர், தாமரைச் செல்வர், அமரர் சுப்பையா பிள்ளை அவர்கள்,

சென்னையில், பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் தலைமையில், 22-2-42-இல் நடைபெறும் நற்றிணை மாநாட்டில் பாலை என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றுமாறும், ஆற்றும் சொற்பொழிவை அப்படியே எழுதித் தருமாறும் வேண்டினார். நானும் அது செய்தேன்.

அம்மாநாட்டினைத் தொடர்ந்து திரு. சுப்பையா அவர்களின் நட்பு தொடர்ந்தது. இலக்கியம் தொடர்பான நூல்களை எழுதித் தருமாறு அன்புக் கட்டளை இட்டார்.

"திருமாவளவன்" என்ற முதல் நூல் 1951ல் வெளிவந்தது. (என் முதல் மகனின் பெயரும் திருமாவளவன் என்பது குறிப்பிடல் நலம்.) அதைத் தொடர்ந்து சங்க காலப் புலவர் என்ற வரிசையில் 16 நூல்களையும், அரசர் என்ற வரிசையில் ஆறு நூல்களையும் வெளியிட்டார் புலவர் வரிசையில் முதல் நூல் 1952லும், அரசர் வரிசையில் கடைசி நூல் 1955லும் வெளிவந்தன.

தமிழ் எழுத்தாளர் உலகிற்கு அறிமுகமாகாத என் நூல்கள் இருபத்தைந்தை மூன்றாண்டு கால அளவில் வெளியிட்டு எனக்குப் பெருமை சேர்த்த திருவாளர் பிள்ளை அவர்களுக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

எழுத்துப் பணி தொடர, மலர் நிலையம், வள்ளுவர் பண்ணை, அருணா பதிப்பகம் என்ற வெளியீட்டார் மூலம் பல நூல்கள் வெளி வந்தன. அரசியல் பணிகளுக்கிடையே கால்டுவெல் அவர்களின் ஒப்பிலக்கண மொழி பெயர்ப்பு 1959ல் வள்ளுவர் பண்ணை மூலம் வெளிவந்தது.

1990 ஏப்ரல் 15ஆம் நாளன்று, என் ஐம்பதாவது நூலாக, திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் தமிழர் வரலாறு மொழிபெயர்க்கப் பெற்று, திரு. பிள்ளை

அவர்களின் மருகர் திரு. இரா, முத்துக்குமாரசாமி அவர்கள் முயற்சியால் கழக வெளியீடாக வெளியிடப் பெற்றது. அவருக்கு நன்றி.

இப்போது (1991) அவர் பணிக்க திருவாளர் வி.ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்களின் Origin and Spread of Tamils, ['தமிழரின் தோற்றமும் பரவலும்'] என்ற நூல் மொழி பெயர்க்கப்பட்டு அச்சிட்டு முடிக்கப்பட்டுள்ளது. திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் Pre Aryan Tamil Culture (ஆரியர்க்கு முந்திய தமிழர் பண்பாடு) என்ற நூலை மொழி பெயர்த்து முடித்துவிட்டு, அவரின் மற்றொரு நூலாகிய Stone Age in India (இந்தியாவில் கற்காலம்) என்ற நூலை மொழி பெயர்க்க எடுத்துக் கொண்டுள்ளேன்- என் எழுத்துப்பணி தொடரும். குறள் பற்றி, சங்க இலக்கியங்கள் பற்றி, பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன். "கல்வி கரையில கற்பவர் நாள்சில" காலம் இடம் தந்தால் என் எழுத்துப் பணி ஓரளவேனும் முற்றுப் பெறும்.

# 2. உள்ளுறை உவமம்

உவமை இரண்டு வகைப்படும்: அறியாத ஒரு பொருளை விளக்க அறிந்த ஒரு பொருளை எடுத்துக்காட்டி இதுபோல் இருக்கும் அது எனக் கூறுவது ஒன்று. இது உலக வழக்கு, செய்யுள் வழக்கு இரண்டிலும் வரும். இது ஏனை உவமம் என்றும் அழைக்கப்படும். எவ்வித அடையும் இல்லாமல் வறிதே உவமம் என்றும் அழைக்கப்படும். மற்றொன்று செய்யுளில் மட்டுமே வருவது; அதுவே உள்ளுறை உவமம்; உவமப்போலி என்றும் அழைக்கப் பெறும்.

ஆடவர்க்குரிய இலக்கணம் அனைத்தையும் குறைவறப் பெற்ற ஓர் ஆண்மகனும். பெண்டிர்க்குரிய இலக்கணம் அனைத்தையும் குறைவறப்பெற்ற ஒரு பெண் மகளும் காதலால் ஒன்றுபட்டுக் கருத்து ஒருமித்த உயர்ந்த இல்வாழ்க்கை நடாத்தும் நிலையில் ஒருவரோடு ஒருவர் சொல்லாடும்போது பலரும் அறிய வெளிப்படையாகக் கூறத்தகாத சில எண்ணங்களை நாகரீகமாக மறைத்துக் கூற, புலவர்கள் கையாளும் முறையே உள்ளுறை உவம்ம். அகத்திணைப் பொருள்களுள் தெய்வம் நீக்கிய ஏனைய கருப்பொருள்களின் இயல்புகளையும் செயல்களையும் எடுத்துக் கூறுமுகத்தான், அகத்திணைத் தலைவர்களாகிய தலைவன் தலைவியர்களின் இயல்புகளையும் செயல்களை யும் உய்த்துணர வைப்பதே உள்ளுறை. இதில் கருப் பொருளின் நிகழ்ச்சி உவமை; அகத்திணைத் தலைவர்களின்

நிகழ்ச்சி பொருள் என்றாலும் ஈண்டு உவமை மட்டுமே வெளிப்படையாகக் கூறப்படும்; பொருள் வெளிப்படை யாகக் கூறப்படாது. பாட்டில் வரும் கருப்பொருள் நிகழ்ச்சிகளைப் படித்த அளவிலேயே அது பாடிய புலவன், அப்பாட்டில் கூற விரும்பிய அகத்திணைத் தலைவர்களின் நிகழ்ச்சிகள் அனைத்தையும் எளிதே உய்த்துணர்தற்கு வேண்டிய சொற்களையெல்லாம் பெய்து பாடுதல் வேண்டும்.

"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென
உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"

என்பது தொல்காப்பியம்.

காதல் மனைவியோடு இல்லறம் மேற்கொண்ட ஒருவன் நாள் சில கழிந்த பின்னர், பரத்தையர் உறவு மேற்கொண்டு மனைவியை மறந்துவிட்டான். கணவனின் இப் பொருந்தா ஒழுக்கத்தை எண்ணி எண்ணி புலம்பினாள் மனைவி. அதனால் அவள் உடல் நலமும் கெட்டது. அவள் உள்ளத் துயரை அவள் தோள் மெலிவு புறத்தார்க்குப் பறை சாற்றியது. அது கண்ட அவள் தோழி "கணவன் தவறே செய்யினும் அதைத் தாங்கிக் கொள்வதே கற்புடைய மகளிர் கடனாகவும், நீ, இவ்வாறு கவலை கொண்டு பிறர் பழிக்க இடம் கொடுப்பது முறையாகாது" என்று அறிவுரை கூறினாள்.

அது கேட்ட அப்பெண் "தோழி! கணவன் எவ்வளவு தான் கொடுமை செய்யினும் அவன் நல்லவன் என்றே நான் எண்ணுகின்றேன். ஆனால் என் தோள்கள் மெலிந்து காட்டி அவன் நல்லன் அல்லன் என்று கூறி விடுகின்றன. என் செய்வேன்" என்று கூறினாள். அவ்வாறு கூறும் நிலையிலும் காதல் கொண்டு கைப்பற்றிய மனைவியையும். காசு ஒன்றே குறியாகும் பரத்தையையும் ஒன்றாகவே மதிக்கும் கணவன் கொடுஞ்செயலைக் கண்டிக்

காமல் இருக்க முடியவில்லை. கண்டிக்கவே விரும்பினள். விரும்பினாளேனும் கணவனைப் பிறர்முன் வெளிப்படையாகக் கண்டிப்பதுமுறையாகாது என்பதையும் உணர்ந்தாள். அதனால் அவனைக் 'கூறுங்கால் ஆற்றங்கரையிலும் கழனிகளின் வரப்புகளிலும் வளர்ந்து நிற்கும் பயனேதுமில்லா நாணல், வயலில் அரும்பாடுபட்டு விளைவிக்க வளர்ந்து நிற்கும் பயன்மிகு கரும்புபோல் பூத்துக் காட்சி அளிக்கும் நாடுடையவன் நம் தலைவன் என்று கூறுமுகத்தான் பயன்மிகு கரும்பும் பயனிலா நாணலும் ஒருசேரப் பூத்திருப்பது போலவே அவன் காதல் மனைவியாம் என்னையும் காசு மகளாம் பரத்தையையும் ஒன்றாகவே மதிக்கின்றான்; என்னே! அவன் கொடுமை எனக் கூறாமல் கூறினாள். இவ்வாறு கருப்பொருளின் நிலை கூறிக் கருத்தை உய்த்துணர வைப்பதே உள்ளுறை.

"கரைசேர் வேழம் கரும்பிற் பூக்கும்
துறைகேழ் ஊரன் கொடுமை நாணி
நல்லன் என்னும் யாமே
அல்லன் என்னும் எம்தடமென் தோளே"

—ஐங்குறுநூறு

யார் யார் உள்ளுறை கூறுவதற்கு உரியவர்; யார் யார் என்னென்ன பொருள்களை உள்ளுறையாக மேற்கொள்ளலாம் என்பதற்கான இலக்கணங்களையும் தொல்காப்பியர் கூறியுள்ளார். தலைவி தான் வாழும் நிலத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் அறிந்தவளல்லளாதலின், அவள் கூறும் உள்ளுறை அவளறிந்த பொருளாகவே இருத்தல் வேண்டும். தோழி அவள் வாழும் நிலத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் அறிந்தவளே ஆயினும், பிற நிலத்திற்குச் சென்று வந்தவள் அல்லளாதலின், அவள்

கூறும் உள்ளுறை அந்நிலத்துப் பொருள்களாகவே இருத்தல் வேண்டும். தலைவனும் நற்றாயும் செவிலியும், பாங்கனும் எல்லா நிலங்களுக்கும் சென்று வந்தவர் ஆகவே அவர்கள் எப்பொருள் பற்றியும் உள்ளுறை கூற உரிமையுடைய வராவர்.

"கிழவி சொல்லின் அவளறி கிளவி"

"தோழிக்காயின் நிலம் பெயர்ந்து உரையாது"

"ஏனோர்க்கெல்லாம் இடம் வரைவின்றே"

என்பன தொல்காப்பிய விதிகள்.

# 3. நெஞ்சே எழு!

ஒரு தொழிலை தொடங்குவார், அத்தொழிலை முற்றுப் பெற முடித்தல் வேண்டும். தொடங்கிய வினைக்கண் வெற்றி வாய்க்கும் வரை உழைக்காது, அதை இடையே கைவிட்டு, வேறு ஒன்றில் கருத்தைச் செலுத்துவாராயின், அவர்க்குப் பொருட்கேடும் புகழ்க்கேடும் உண்டாம்.

அதனால் ஒரு வினையைத் தொடங்குமுன் அவ்வினையின் ஆற்றல், அவ்வினையைத் தொடங்கும் தன் ஆற்றல், அவ்வினை வெற்றிபெற முடியாவாறு இடைநின்று தடுக்கும் பகை ஆற்றல் ஆகிய அனைத்தையும் பல முறை அளந்து நோக்கி தன்னால் அதை முடிக்க முடியும் எனத் தெளிவாக உணர்ந்த பின்னரே தொடங்குதல் வேண்டும்.

அவ்வாறில்லாமல் ஆர்வத்தில் ஒன்றைத் தொடங்கி விட்டு அதில் ஒரு பகுதி இன்னமும் முடிய வேண்டியிருக்கும் பொழுது, இதை முடிக்கும் ஆற்றல் எமக்கு இல்லை என்று கூறி அதை அந்நிலையிலேயே கைவிட்டுப் போவது அறிவுடைமையாகாது. அத்தகையார் எடுக்கும் வினை எதுவும் வெற்றி பெறாது. உயர்ந்தோர் அவரை மதியார் அவ்வினையைத் தொடங்குமுன், அவர்க்கிருந்த புகழும் அதன்பின் இல்லாகிவிடும்; இவையெல்லாம், தொடங்குவதற்கு முன்பாகவே புலமுறை எண்ணிப் பார்க்காததன் விளைவாம்.

இவ்வுண்மையை உணர்ந்த ஓர் இளைஞன், அண்மையில் மணஞ்செய்து கொண்டிருந்தான். அவன் வாழ்க்கைத்

துணையாய் வாய்த்திருந்தவள், அழகிற் சிறந்து விளங்கினாள். அவள் பால் அவன் தன் உயிரையே வைத்திருந்தான். மணம் முடிந்து சின்னாட்கள் தான் ஆயிருந்தன.

ஒருநாள், அவன், தன் இல்வாழ்க்கை நிலையினை எண்ணிப் பார்த்தான். வருவார்க்கு வழங்கி வாழும் தன் இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் தன்பால் இல்லாமையை உணர்ந்தான், அதனால் வற்றாப் பெருநிதியை அது கிடைக்கும் வெளிநாடு சென்றேனும் சேர்த்து வருதல் வேண்டும் எனத் துணிந்தான்.

அவன் நெஞ்சு, அந்நிலையில் ஆழ்ந்து கிடக்கும் அப்போது அவன் மனைவி அவன் முன் வந்து நின்றாள். அவன் உருவ நலனை இளைஞன் ஒருமுறை நோக்கினான் மனைப் புறத்து நொச்சிவேலியில் படர்ந்திருக்கும் முல்லைக் கொடியீன்ற மலரும் பருவத்து அரும்புகள் வரிசையாகத் தோன்றுவது போலும் அவள் வெண்பற்களின் வனப்பைக் கண்டான். முல்லை அரும்புகளின் வெண்ணிறம் ஒன்றைக் கண்டு அதை விரும்பி அடைந்து, அதை விடுத்து வரமாட்டாது அதையே சுற்றிச் சுற்றித் திரியும் வண்டுகள் போல், அவள் பல்லழகு ஒன்றிற்கே தான் தன் உணர்வு இழந்து எப்போதும் அவள் நினைவாகவேயிருந்து வருந்துவதை உணர்ந்தான். தன்னை அடிமை கொள்ள அப்பல்லழகு ஒன்றே போதியதாகவும்; அவள் அழகு அத்துடன் அமையவில்லை. அவள் வயிறும் அழகாயிருந்தது; அவள் இடையும் அழகாயிருந்தது.

பின்னப் பெற்றுப் பின்னால் கிடந்து தொடங்கும் கூந்தலை நாள் முழுதும் நின்று பார்த்துக் கொண்டிருக்கலாம் போல் தோன்றிற்று. தோள் மலைவளர் மூங்கில் போன்றிருந்தது. அதன் பருமையும் மென்மையும் அதற்கு மேலும் நலம் அளித்தன.

இவை அத்தனைக்கும் மேலாக கள்ளம் அற்ற அவள் உள்ளத்தில் காதல் உணர்வு ஒன்றே இடம் பெற்றிருந்தமையால், அவள் உருவ நலன் மேலும் பன்மடங்கு உயர்ந்து காட்டிற்று.

மனைவியின் இம்மா நலத்தைக் காண நேர்ந்ததும் அவன் உள்ளுணர்வு சிறிதே நிலை தளர்ந்தது. இத்துணைப் பேரழகுடையாளைப் பிரிந்து பொருளீட்டப் போவது கூடாது. இவளை இங்கே விட்டுச் சென்றால் அங்கே வெற்றி பெறுதல் இயலாது.

இவள் பேரழகு தன் முயற்சியைப் பாழாக்கிவிடும். ஆகவே பொருளீட்டும் நினைப்பு இப்போது வேண்டாம் எனத் தன் நெஞ்சை நோக்கிக் கூறிற்று. உள்ளுணர்வு உரைப்பது உண்மை என்பதை அவன் நெஞ்சம் உணர்ந்திருந்தது. என்றாலும், பொருளின் இன்றியமையாமை எவ்வாறாயினும் சென்று பொருளீட்டி வா எனக் கூறின மையால் அந்நெஞ்சு, அப்பொருளீட்டும் முயற்சியில் நீங்காது நின்றது. அவன் புறப்பட்டு விட்டான்.

இளைஞன் பல காவதங்களைக் கடந்து சென்று கொண்டிருந்தான். காட்டு வழிக் கொடுமையால், அவன் உடல் நலன் சிறிதே தளர்ந்தது. உடல் தளர்ச்சி அவன் உணர்வையும் பற்றிக் கொண்டது. உணர்வு உரம் இழந்ததும், காதல் வேட்கை உரம் பெற்று எழுந்தது. நெஞ்சு அதற்கு அடிமையாகி விட்டது. அதனால் அது அவனை மேற்கொண்டு செல்லாவாறு தடை செய்தது. மீண்டும் மனை நோக்கி செல்லுமாறு வற்புறுத்திற்று. இந்நிலையில், அவன் வினை மேற்கொண்டு வழியை முன்னோக்கிக் கடப்பதோ, காதலியை நினைந்து கடந்து வந்த காட்டு வழியே மீள்வதோ செய்ய மாட்டாது செயலிழந்து நின்று விட்டான். காதலுக்கு அடிமைப்பட்டு கடமை முயற்சிக்குக்கேடு சூழும் நெஞ்சின்பால் அவன் உள்ளுணர்வு சினம் கொண்டது.

ஆனால் அதைக் கடிந்து கொண்டால் மேற்கொண்டு வந்த காரியம் கெட்டு விடும்: நெஞ்சை ஒதுக்கி விட்டுச் சென்றால், வெற்றி கிட்டாது. ஆகவே அந்நெஞ்சு ஏற்கு மாறு இனிய சொற்களால் அதற்கு அறிவூட்டி அதையும் உடன்கொண்டு செல்லக் கருதிற்று உள்ளுணர்வு.

ஆசைக்கு அடிமைப்பட்டு, காதலியைக் காணத் துடித்து நிற்கும் நெஞ்சை அணுகி, "நெஞ்சே! காதலி பேரழகு வாய்ந்தவள். அவளைப் பிரிந்து வாழ்வது நம்மால் இயலாது. மேலும் நாம் போய் விட்டால், அவள், நம் பிரிவை எண்ணித் துயர் உறுவதால், அவள் அழகு அவளை விட்டுப் போய்விடும்.

போன அழகு, பின்னர் எப்பாடுபடினும் மீண்டு வராது. ஆகவே, அவள் அழகு கெட, நாம் துயர்உற, பிரிந்து போவது பொருந்தாது என, அன்று, எத்தனைபோ முறை எடுத்துச் சொன்னேன். அதை நீ அப்போது கேட்க மறுத்து விட்டாய்.

வினையாற்றுவதையே விரும்பி நின்றாய். வேறு வழி யின்றி நானும் அதற்கு இசைந்தேன். புறப்பட்டு இவ்வளவு தூரம் வந்து விட்டோம். இனி, வீட்டிற்கு வெறுங்கையோடு மீள்வது மதியுடைமையாகாது.

மேலும், நம் பிரிவைப் பொறாது நம்மனைவி வருந்துவா ளெனினும் அவள் நாம் வறிதே மீளக் காணின் மகிழாள். மாளாத் துயர் கொண்டு மாண்டு விடுவள். வினைக் கருதிப் பிரிந்து வந்த நாம், அவள் கண்டு வியந்து மகிழ்மளவு மாநிதி ஈட்டிச் சென்ற வழியே, அவள் மனம் மகிழும். ஆகவே அவள் மகிழ்ச்சியே உன் குறிக்கோளாயின், அவள் மகிழுமாறு மாநிதி ஈட்டும் பணி மேற்கொண்டு மேற் செல் வோம் வருக.

"நெஞ்சே! என் சொல்லை ஏற்று, என் பின் வரின் காதலியை நினைந்து விரைந்து மனைநோக்கி மீளாது, வினையை நினைந்து விரைந்து வழி மேல் செல்வதே சிறப்புடைத்து; அதுவே அவளுக்கும் மகிழ்ச்சி தரும் என்பதை உனக்கு விளங்க எடுத்துரைக்கின்றேன்; அதை விளக்கும் அரிய காட்சிகளையும் காட்டிக் கொண்டே செல்கிறேன்; என்னைப் பின் தொடர்ந்து வருக. நெஞ்சே! நாம் செல்லும் வழியில் மராமரம் மலர்ந்து மணம் நாறி நிற்கும்.

ஆங்கு வீசும் தென்றற்காற்று மலர் பறிக்க வல்லானொருவன், மலரைப் பறிக்கத் தன் கைக் கோலால் கிளைகளை அலைக்கழித்தல்போல, மராமரத்துக் கிளைகளை அலைக்கழித்து, அம்மலர்களை வழிச் செல்லும் மக்களின் தலை முடியில் சென்று உதிருமாறு செய்யும்.

நெஞ்சே! காற்றின் செயல் கொடுமை வாய்ந்ததாகத் தோன்றினும் அக்காற்று இல்லையேல் அம்மலர்கள் மலர்ந்தும் பயனிழந்து போயிருக்கும். அக்காற்று வீசியதால் அதன் மணம் காற்றில் பரவிப் பயன் பெற்றது. அம்மலரும் மக்கள் முடியில் படிந்து மாண்புற்றது' அந்நிகழ்ச்சி, நம் பிரிவு முயற்சி நம் காதலிக்குக் கொடுமை புரிவதாகாது. மாறாக வாழ்வுப் பயனை அவள் அடையுமாறு பண்ணி, பிறரையும் வாழ்விக்கப் பண்ணும் என்ற உண்மையை உணர்த்தாதோ?

"நெஞ்சே! மராமரக் காட்சியைக் கடந்து சென்றால் காட்டுப் பன்றியை செந்நாய் தாக்கும் காட்சியைக் காண்பை; செந்நாய் வாளாவந்து பன்றியைத் தாக்காது. மலைக்குகையில் குட்டி ஈன்ற தன் காதற்பிணவு பசியால் வருந்துவதைப் பொறாதே, அது கேழலைத் தாக்கும்; அந்நிகழ்ச்சி மனைவி மகிழுமாறு மாநிதி ஈட்டி வருவது கணவன் கடமையாம்; அக்கடனாற்றச் செல்வான், இடைவழியில்

நெஞ்சு வருந்தும் கொடுமை புரியினும் கேடின்றாம் என்ற உண்மையை உணர்த்தாதோ?

"நெஞ்சே! பன்றி செந்நாய் போராட்டத்தையொட்டி நிகழும் பிறிதொரு நிகழ்ச்சி மற்றோர் உண்மையை உணர்த்துவதாய் இருக்கும். கேழலோடு தொடர்ந்து வரும் பெண்பன்றி தன் காதலனைச் செந்நாய் தாக்கக் கண்டதும், தன் காதலனுக்குத் துணையாய் நின்று நாயோடு பொரிட நினையாது, அவை போராடும் அவ்விடத்தில் நிற்கவும் அஞ்சி, கண்மண் தெரியாமல் கடுவேகமாக ஓடிவிடும். அவ்வாறு ஓடுங்கால் எதிரே ஈச்சமரம் நிற்பதையும் அறியாது, அதன்மீது மோதிக் கொள்ளும். பன்றியால் மோதுண்ட அவ்வீச்சமரத்துக் காய்கள் கனிந்து உதிர்வதற்கு மாறாகச் செங்காய்களாகவே உதிர்ந்து மண்ணில் வீழ்ந்து பாழாம்.

இக்காட்சியும் நிகழ்ச்சியும் கணவன் கடமை மேற்கொண்டு உழைக்கும்போது, அவன் மனைவி அவனுடன் இருந்து உறுதுணை புரிவதை விடுத்து அவ்வினை கண்டு வெருண்டு அகன்றால், அதனால் அவளும் வாழ்விழப்பள்; தன்னை அடுத்து வாழ்வாரையும் வாழ்விழக்கப் பண்ணுவள் என்ற உண்மையை உணர்த்தாவோ?

"நெஞ்சே! அவ்விடத்தையும் கடந்து சென்றால் காட்டு வழியைக் கடந்து செல்வோரின் நீர் வேட்கையை நீக்கி உதவும் உயர்ந்த உள்ளம் கொண்ட சிலர், ஆங்குக் கிணறு ஒன்று எடுக்கத் தொடங்கி, ஓரளவு எடுத்ததும், அதில் நீர் ஊறாமை கண்டு இதில் நீர் ஊறாது என எண்ணி, அதை அந்நிலையிலேயே விட்டுச் சென்ற ஆழ்ந்த பள்ளம் ஒன்று தோன்றும்.

அவ்வழியாக வரும் யானைக்கூட்டம், அதைக் கண்ணுற்றதும் அது தம் வெண்கோடுகள்பால் விருப்பம் கொண்டு தம்மை வேட்டையாடிப் பிடிக்க எண்ணிய வேடர், வெட்டி

வைத்த பள்ளமாம் எனப்பிறழ உணர்ந்து, அதைத் தூர்த்துப் பாழ் செய்யும், இக்காட்சி நாட்டிற்கு நற்பயன் அளிக்கும் கருத்தோடு தொடங்கும் வினை விரைந்து பயனளிக்காமை கண்டு, இடையே கைவிட்டு விடுதல் கூடாது. வெற்றி காணும் வரை தொழிலாற்றுதல் வேண்டும். இடையே விடின், அது காணும் பிறமக்கள், அவ்வினை தம்மை வாழ்விழக்கத் தொடங்கப் பெற்ற வினையாம் எனப் பிறழ உணர்ந்து அதை அழிக்க முனைவர். அதைப் போலவே நல்லெண்ணம் கொண்டு நான் தொடங்கிய இவ்வினை, நம் காதலிக்குக் கேடு சூழத் தொடங்கியது என்ற பிழைபட்ட உணர்வால் நீ தடை செய்ய, இடையிலேயே நின்று விடுமாயின் நீள் பழி யாம் என்பதை உணர்த்துவதாகாதோ?

“நெஞ்சே! என்னோடு வந்து, அக்காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் நேரில் கண்டால், உன் அறிவும் திருந்தும்; ஆகவே, எழுந்து என்னைத் தொடர்ந்து விரைந்து வருக” எனக்கூறி மேலே செல்லத் தொடங்கினான்.

“மனையிள நொச்சி மௌவல் வான்முகைத்
துணைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்
அவ்வயிற்று, அகன்ற அல்குல், தைஇத்
தாழ்மென் கூந்தல், தடமென் பணைத்தோள்,
மடந்தை மாணலம் பசப்பச், சேய்நாட்டுச்
செல்லல்; என்று யான் சொல்லவும், ஒல்லாய்,
வினை நயந்து அமைந்தனை; ஆயின், மனைநகப்
பல்வேறு வெறுக்கை தருகம்; வல்லே
எழுஇனி வாழி என் நெஞ்சே! புரியிணர்
மெல்ல விழ அஞ்சினை புலம்ப, வல்லோன்
கோடு அறை கொம்பின், வீ உகத் தீண்டி,
மராஅம் அலைத்த மணவாய்த் தென்றல்.
சுரம் செல் மள்ளர் சுரியல் தூற்றும்
என்றூழ் நின்ற புன்தலை வைப்பில்

பருந்து இளைப்படூஉம் பாறுதலை ஓமை
இருங்கல் விடரகத்து ஈன்று இளைப்பட்ட
மென் புனிற்று அம்பிணவு பசித்தெனப், பைங்கண்
செந்நாய் ஏற்றை, கேழல் தாக்க,
இரியல் பிணவல் தீண்டலின், பரீஇச்

செங்காய் உதிர்ந்த பைங்குலை ஈந்தின்
பரல்மண் சுவலமுரண் நிலம் உடைத்த
வல்வாய்க் கணிச்சிக் கூழ் ஆர் கூவலர்
ஊறாது இட்ட உவலைக் கூவல்
வெண்கோடு நயந்த அன்புஇல் கானவர்

இகழ்ந்து இயங்கு இயவின் அகழ்ந்த குழிசெத்து
இருங்களிறு இனநிரை தூர்க்கும்
பெருங்கல் அத்தம் விலங்கிய காடே."

திணை : பாலை

துறை : பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன், இடைவழியில் மீளக் கருதிய நெஞ்சைக் கழறியது.

புலவர் : காவன் முல்லைப் பூதனார்.

1. மௌவல்—முல்லை; வான்—வெள்ளிய; முகை—அரும்பு.
2. மாவீழ்—வண்டுகள் விரும்பும்;
3. அவ்—அழகிய; கைஇ—பின்னப்பெற்று
6. ஒல்லாய்—கேட்டு அதன்படி நடவாயல்.
7. ஆயின்—ஆராய்ந்தால்; மனைநக—மனைவி மகிழ
9. இணர்—பூங்கொத்து
10. சினை—கிளை; புலம்ப—வருந்த; வல்லோன்—மலர் பறிப்போன்

11. கோடு—கிளையை; அறை—அடிக்கும்; கொம்பின்—கைக்கோல்போல்; வீஉக—மலர் உதிர; தீட்டி—தாக்கி

13. மள்ளர்—மக்கள்; சுரியல்—சுருந்தலில்

14. என்றூழ்—வெப்பம்; புன்தலை—இழிந்த இடங்களை உடைய; வைப்பின்—ஊர்களை உடைய

15. இளைப்படும்—ஈன்று கிடக்கும்; பாறுதலை—விரிந்த உச்சி

18. கேழல்—ஆண்பன்றி

19. இரியல்—அஞ்சி ஓடும்; பிணவல்—பெண் பன்றி; பரீஇ—அறுபட்டு

21. பரல்—விதைகளோடு கூடிய; சுவல்—மேட்டு நிலமாகிய; முரண் நிலம்—வலிய நிலம்

22. வல்வாய்—கூரிய வாய்; கணிச்சி—குந்தாலி; கூழ் ஆர்—கூழ் உணவு உண்ணும்; கூவலர்—கிணறு வெட்டுவார்

23. உவலை—தழை மூடிக் கிடக்கும்

24. நயந்த—விரும்பிய

25. இகழ்ந்து—தீங்கற்று என நினைந்து இகழ்ச்சியாக; இயவின்—வழியிடையே; செத்து—கருதி

# 4. திருக்கோவையார் உரைநயம்

மணிவாசகர் பாடிய இருவாசகங்கள் திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும். செவிக்கும் சிந்தைக்கும் இனிக்கும் சொல் நயமும் பொருள் நயமும் வாய்ந்த திருவாசகத்தைத் "தித்திக்கும் திருவாசகத்தேன்" எனப் போற்றும் புலவர்கள், திருக்கோவையார் என்னுவார்—எண்ண விழைவுகளுக்கேற்ப ஆரணமாகவும், "ஆகமத்தின் காரணமாகவும் அமைந்து ஆயுந்தொறும் ஆராப்பேரின்ப வாரிதியாகும் எனப் போற்றுவர்.

கோவையார் பெற்றிருக்கும் இவ்வின்பக்குவியல்களைப் படிப்பார் உள்ளத்தில் கொண்டு சென்று கொட்டுவது, அக்கோவைக்குப் பேராசிரியர் வகுத்திருக்கும் உரையாகும். அவர் உரை மட்டும் இல்லாமல் போயிருந்தால் கோவையின் கருத்துச் செறிவுகளைக் கண்டு களிப் பெய்த வாய்ப்பே இருந்திருக்காது. தோலும் தொலுப்பும் அகற்றிச் சுளை சுளையாக எடுத்துத் தேனில் தோய்த்து அளித்த வழியே பலாக்கனியின் சுவையினை உணர முடியும்.

அதுபோல் சொல்லையும் சொற்றொடரையும் தனித் தனியே பிரித்து இலக்கண விளக்கம் பொருள் விளக்கங் களைக் கடா விடைகள் மூலம் விலக்கிய பின்னரே கோவையின் சுவையினை உணர வைத்துள்ளார் உரை யாசிரியர்.

செய்யுட்குப் பொருள் கூறத் தொடங்குவதன் முன்னர் பொருள் கொள்வதற்கு ஏற்ப, சொற்களையும் சொற்றொடர்களையும் முன்னும் பின்னுமாகக் கொண்டு கூட்டுவதும் தொகைச் சொற்களை விரிப்பதும் செய்வர். அதன்பின் சொற்பொருள் கூறுவர். அதையடுத்து அவ்வாறு பொருள் கூறும் நிலையில்; விளங்கப் பொருள் சொல்லாது விடுத்த சொற்களுக்கான பொருளை விரிவாகக் கூறுவர் பின்னர் ஒரு சொல் அல்லது ஒரு தொடருக்குத் தாம் கொண்ட பொருளேயன்றி கொள்ளலாகும் பிற பொருள் ஏதேனும் இருப்பின் அது கூறி, அவ்வாறு கொள்வதன் அமைதி அமைதி இன்மைகளை விளக்குவர்.

இறுதியாக ஒவ்வொரு சொல்லையும் தொடரையும் எடுத்துக் கொண்டு அவற்றை ஆண்டிருப்பதால் காணலாகும் சொல்நயம் பொருள் நயங்களையும், பெறலாகும் வேறு பிற விளக்கங்களையும் விரிவாக எடுத்துக் கூறி படிப்போர் உள்ளத்தில் பாட்டும் பொருளும் பளிங்கென ஒளிவிடச் செய்து விடுவார்.

"திருவ்ளர் தாமரை" என்ற தொடருக்குத் "திருவளரும் தாமரைப் பூவினையும்" என்று பொருள் கூறிய பின்னர், திரு என்னும் சொல்லைத் தனியே பிரித்துப் பொருள் கூறத் தொடங்கியவர், "திருவென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்" எனப் பொது நிலையில் கூறி, அதையடுத்து, திருவென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் என்றது அழகு" என்று அதற்கு மேலும் ஒரு பொருள் விளக்கம் கூறியுள்ளார்.

பின்னர் தாம் அவ்வாறு பொருள் கோடற்காம் அமைதியினை விளக்குவான் வேண்டி, "இஃது என் சொல்லியவாறோ வெனின், யாவன் ஒருவன் யாதொரு பொருளைக் கண்டானோ, அக் கண்டவர்க்கு அப்பொருள் மேற்சென்ற விருப்பத்தோடே கூடிய அழகு; அதன்மேல்

அவற்கு விருப்பஞ்சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் எவ்வகையானும் பிறிதொன்றிற்கு இல்லாமையால் திரு என்றது அழகுக்கே பெயராயிற்று என விளக்கம் தந்துள்ளார். அத்துடன் அமையாது" கோயிலைத் திருக்கோயில் என்றும், கோயில் வாயிலைத் திருவாயில் என்றும், அலகைத் திருவலகு என்றும் பாதுகையைத் திருவடிநிலை என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன எல்லாம் திருமகளை நோக்கி எழுந்தன அல்ல; அது கண்டவனுடைய விருப்பத்தானே எழுந்தது; ஆதலாலும் திருவென்பது அழகென்றே அறிக அதனால் திருவென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமே" என உலக வழக்கை எடுத்துக் காட்டித் தாம் கொண்ட பொருளுக்கு அரண் செய்யும் அழகுணர்ந்து, இன்புறற்கு உரித்து.

"திருவளர் தாமரை" என்ற தொடருக்குத் "திருவளரும் தாமரைப் பூவினையும்" எனப்பொருள் கூறிப் பின்னர் "திருமகள் தங்கும் தாமரை எனினும் அமையும்" எனக் கொள்ளலாகும் வேறு பொருள் கூறியவர், அதுவும் தாம் கொண்ட முன்னையை பொருளோடு தொடர்புடையதே அல்லது முரண்பட்டது அன்று என்பதனை விளக்க, "எல்லாராலும் விரும்பப்பட்ட அழகு அவட்கு உண்டாகையாலே திருமகள் என்று பெயராயிற்று. அங்ஙனம் பெருமையுடையவளும், இதன் சிறப்பு நோக்கியே இதனில், இருந்தாளல்லது, தன்னாலே இதற்குச் சிறப்புப் பெறவேண்டி இருந்தாள் அல்லள். ஆதலான் தாமரைக்கு ஒத்ததும் மிக்கதும் இல்லை; அங்ஙனம் பெருமையுடையவளாலும் விரும்பப்பட்டதாதலான் திருவென்பது கண்டாரால் விரும்பபடும் தன்மை நோக்கம் என்பது பெற்றாம்" என அளிக்கும் வாதம், அறிவுச் செறிவு வாய்ந்த வாதமாதல் அறிந்து அகம் மகிழ்தற்கு அரியதன்றோ!

தாமரைக்கு அடையாக வந்துள்ள "வளர்" என்ற காலம் கரந்த பெயரெச்சத்திற்கு "வளரும் தாமரை" என

நிகழ்காலம் பொருள் தோன்ற பிரித்துவிட்டு, உம்மை நிகழ் காலம் குறிப்பதன்று, மூன்று காலத்தையும் குறிப்பதாகும். இறந்த காலம், நிகழ்காலம், வரும் காலமாகிய மூன்று காலங்களிலும் நிகழும் நிகழ்ச்சியை "உம்" ஈறு உணர்த்தும் என்பதை உணர்த்துவான் வேண்டி, "இது வழக்கினும் வருவதுண்டோ எனின் உண்டு; அது ஞாயிறு திங்கள் இயங்கும்; யாறு ஒழுகும்; மலை நிற்கும் என்றற்றொடக்கத் தனவற்றான் அறிக, "முன்னிலைக் காலமும் தோன்றும் இயற்கை அம்முறை சொல்லும் நிகழும் காலத்து மெய் நிலைப் பொதுச் சொல் கிளத்தல் வேண்டும்" என்ற தொல்காப்பிய விதியை மேற்கோள் காட்டி "ஆகலின், உம்மைச் சொல் வரும் காலத்தையே காட்டாது, மூன்று காலத்திற்கும் பொதுவாய் நிற்கும் என்றே அறிக" என முடிப்பதும், அவர்தம் இலக்கண விளக்கத்திற்கு விழுமிய தோர் எடுத்துக்காட்டாம்.

மருத நிலத்துத் தாமரை, நெய்தல் நிலத்துக் காவி, முல்லை நிலத்துக் குமிழ், பாலை நிலத்துக் கோங்கு, குறிஞ்சி நிலத்துக் காந்தள் ஆகிய ஐந்து மலர்களைக் கூறி யிருப்பது கொண்டு, "ஓரிடத்து ஒரு கலியாணம் உண்டா னால், எல்லாரிடத்தும் உண்டாகிய ஆபரணங்களெல்லாம் அவ்விடத்துக் கூடி, அக்கலியாணத்தைச் சிறப்பித்தாற் போலப் பல நிலங்களும் இக்குறிஞ்சியையே சிறப்பித்து நின்றன, எனக் கூறும் விளக்கமும், "திருவளர் தாமரை", "சீர் வளர்காவி" "குருவளர் பூங்குமிழ்", "பைங்காந்தள் என ஒவ்வொரு மலருக்கும் சிறப்பு அடை கொடுத்துக் கூறிய ஆசிரியர், கோங்கு மலர்க்கு மட்டும் அடைகொடாது "கோங்கு" என வாளா கூறியது கொண்டு, "இதற்கு அடை கொடாதது பாலைநிலம் செல்லுதல் நோக்கி, என்னை பாலைக்கு நிலம் இன்று ஆகலான்" எனக்கூறும் விளக்கமும், சொல்லாட்சி அமைதி காணும் அவர்தம் அறிவு நுட்பத் திற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாம்.

தலைமகளைக் கண்ணுற்று வியந்து நிற்கும் நிலையில் தலைவன் கூறுவதாக அமையும் இப்பாட்டில் அன்னத்தின் நடைபோல நடை பெற்று எனப் பொருள் தரும் "என நடைவாய்ந்து" என்றதொடர் அமைந்திருப்பதைக்கண்டார் உரையாசிரியர்; தலைமகளை முதன்முதலாகக் கண்ட தலைமகன், அவள் பேரழகு கண்டு; மானோ மடமயிலோ, மலர் மகளோ, மான்மகளோ என ஐயுறுதற்குக் காரணமாய் வியப்புற்று நிற்கும் நிலையில் அவன் வாய் வழி வெளிப் படும் சொற்களே காட்சி எனும் துறை தழுவி வருதல் வேண்டும்; வியப்பு ஒருவாறு தணியத் தலை தூக்கிய ஐயம், அவள் கண் இமைத்தல், கால் நிலம் தோய்தல் முதலாயின கண்டு அவள் மண்மகளே எனத் துணிவன், அவ்வாறு துணியத் துணை நிற்கும் நிகழ்ச்சிகளுள் ஒன்றாகிய கால்நிலம் தோய்தல், அது நடை பயிற்றுதல் ஆகிய நிகழ்ச்சிகளைக் காட்சி எனும் துறை அமைந்த செய்யுளில் கூறுவது அகத்திணை மரபுக்கு ஒவ்வாது; ஆனால் மணி வாசகப் பெருந்தகை அதை இச்செய்யுளில் கூறி விட்டார்; ஆகவே, "நடை கண்டானாயின், மேல் ஐயநிலை உணர்த்தல் வழுவாம் எனின், இவன் நடை கண்டான் அல்லன், இம்மாலை நடக்குமாயின் அன்ன நடையை ஒக்கும் என்றான்" என அமைதி கூறி இருப்பது இலக்கண மரபு வழுவாது காக்கப்படல் வேண்டும்" என்பதில் உரை யாசிரியர் காட்டும் ஆர்வத்தை உணர துணை புரிவ தாகும்.

இவர் உரையில் செந்தமிழ் சிலம்பொலிக்கிறது என்றாலும் இடையிடை வடசொற்களின் வாடையும் வீசுவதும் உணர்கிறோம். முதற்பாட்டிற்கு வகுத்த உரையில் மட்டும் ஆபரணம், கலியாணம், கேசம், சிருங் காரம், தவிசு, நாயகர், பாதம், விகாரம், விசேஷத்து போலும் வடசொற்கள் இடம் பெற்றுள்ளன.

# 5. பெருமை என்பது கெடுமோ?

தண்ணித் தமிழ் நாட்டில் கடல் வளம் கொழிக்கும் கவின் மிக்கது அந்நாடு. இயற்கை அன்னை அளித்த அரிய செல்வமாய உப்பு, சிறு சிறு குன்றுகள் போல் ஆங்குக் குவிந்து கிடக்கும் உப்பை உள்நாடுகளுக்குக் கொண்டு சென்று விற்கும் உமணர் எனும் உப்பு வணிகர் வண்டிகளை வரிசை வரிசையாக ஓட்டி வந்து நிறுத்தி உப்புப் பொதியேற்றும் காட்சியும், அவ்வண்டிகளில் பூட்டப்பெற்ற வலிய காளைகள் மலை நாடுகளிலும் மணல் வெளிகளிலும், கழிகளிலும், கழனிகளிலும் உப்புப் பொதியேற்றிய வண்டியுருள்கள் ஆழப் பதிந்த விடத்தும் மனம் தளராது மண்டியிட்டு ஈர்த்துச் செல்லும் இனிய காட்சியும் காண்பார் கண்களில் களிநடம் புரியப் பண்ணும்.

இத்தகைய உப்பு வணிகத்தால், அந்நாடு ஒருபால் உயர்வடைய, அந்நாட்டு உழவர்கள் தம் உழைப்பாலும், உயர்ந்த பண்பாலும் அந்நாட்டுப் பெருமையை மேலும் உயரப் பண்ணினர். நாட்டில் மக்கள் உழைக்க வேண்டாமே உண்டாம் உப்புச் செல்வம் மண்டிக் கிடக்கிறது; ஆகவே நாம் உழைக்க வேண்டிய இன்றியமையாமை இல்லை என அந்நாட்டு மக்கள் மனம் அடங்கி மடங்கியிரார்; உழுதும், விதைத்தும், விளைத்தும் பெறலாகும் நெல் மலைகள் அந்நாட்டின் களந்தோறும் கணக்கிலவாய் நின்று காட்சி அளிக்கும்; உழைத்து உருபொருள் பெற்ற உழவர், களம் நோக்கி வந்து பாடி

நிற்கும் புலவர்க்கும், பாணர், பொருநர், கூத்தர் முதலாம் இரவலர்க்கும் வாரி வழங்கி உயர் புகழ் பெற்றுப் பெருமை யடைவர்.

செந்நெல்லையும் வெண்கல் உப்பையும் நாடு வேண்டு ம வு பெற்றிருந்தும் அந்நாட்டு மக்கள் அவற்றோடு அமைதி காண்பாரல்லர். ஒரு நாட்டில் உணவுக் குறைபாடு என்றுமே உண்டாகாதிருத்தல் வேண்டுமாயின் அந்நாடு நெல்லுணவு ஒன்றையே நம்பியிருந்தல் கூடாது: நெல்லுணவிற்குத் துணையாக வேறு துணையுணவுகளையும் மக்கள் அறிந்து மேற்கொள்ளுதல் வேண்டும் என்பதை அந்நாட்டு மக்கள் உணர்ந்திருந்தனர்; அதனால் கடற்கரை நாடாகிய தங்கள் நாட்டிற்குக் கடல் நீர் அளிக்கும் மீன் உணவு, அத்தகைய துணை உணவாய்ப் பயன்படும் என அறிந்து அம்மீன் பிடிக்கும் தொழிலை நன்குக் கற்றிருந்தனர்.

பொடி மீன்களும் பிழைத்துப் போகாதவாறு, சிறு சிறு கண்கள் அமைத்துப் பின்னிய அழகிய வலைகளை நீண்ட கயிறுகளில் பிணித்து எடுத்துச் சென்று, கடற்பரப்பில் மீன்கள் நிறைய வாழும் இடங்களை அறிந்து அவ்விடங் களைச் சுற்றி வலைகளை விரித்து வைத்துவிட்டு வந்து கரை-யேறுவர். சிறிது பொழுது கழித்து, தாய், தந்தை, மனைவி மக்கள், மாமன், மாமி, மருமகன், மருமகள் ஆகிய உறவினர் அனைவரும் ஒன்றுகூடி நின்று வலை பிணித்த கயிற்றினை ஒருசேரப் பற்றி ஒருமுகமாக ஈர்ப்பர்:

வலையும் பெரியதாய், வலையில் சிக்கிய மீன்களும் பெருங் கூட்டமாய் அமைந்து விடுமாயின் வலையை எளிதில் ஈர்க்க மாட்டாது எல்லோரும் தளர்ந்து போவர்; என்றாலும் தளர்ச்சியால் தம்முயற்சியைக் கைவிடுவாரல்லர்; உப்புப் பொதியேற்றிய சகடு சேற்றில் சிக்கி ஆழ்ந்துபோன விடத்து எருதுகள் மண்டியிட்டும், மண்டையைத் தாழ்த்தியும் ஈர்த்து

வெளியேற்றிச் செல்வதைக் கண்டு பழகிய அப்பரதவர் வலையின் பொறை கண்டு மலைக்காது மண்டியிட்டு ஈர்த்துக் கரை சேர்ப்பர்.

கரை சேர்ந்த வலைக்குள் இன இனமான மீன்கள் கணக்கிடற்கியலாதவாறு கூட்டமாய் அகப்பட்டிருக்கக் கண்டு அகம் மகிழ்வர்; அம் மகிழ்ச்சியால் ஆங்கு வந்து இரந்து நிற்கும் இரவலர்க்கு வழங்கி அவரைப் போக்கி விட்டு பின்னர் தம் பரதவர் குடியினைச் சேர்ந்தார் அனை வருக்கும், அவரவர் குடியளவிற்கு ஏற்பக் கூறிட்டுக் கொடுத்து விட்டு. எஞ்சியதை ஆங்கு வந்திருக்கும் மீன் வணிகர்பால் விலை பேசித் தருவர். முடிவில் கடன் முடித்த மன நிறைவாலும் கடல் வளைத்து ஈர்த்த உடல் தளர் வாலும் தம்மை மறந்து அம் மணல் மேட்டிலேயே கிடந்து உறங்கி விடுவர்.

இத்தகைய பணவளமும் மனவளமும் நிறைந்த நாட்டில் சிறந்து விளங்கிய குடியொன்றில் தோன்றிய ஓர் இளைஞன் உரிய பருவத்தில் பெண்ணொருத்திபால் காதல் கொண் டான். இளைஞன் நாட்டு உழவர்களும், நுளையர்களும் உழுதும் உழைத்தும் வருவார்க்கு வழங்கியும் வாழும் விழுமிய வாழ்க்கைப் பண்பாடு அவ்விளைஞன் பாலும் பொருந்தி யிருக்கும்; காதல் கொண்ட கன்னியை கடிதில் மணம் முடித்துக் கொண்டு மனையற வாழ்வு மேற்கொள்வன் என நம்பி, அப்பெண்ணும் அவனைக் காதலித்தாள்; இருவர் காதலும் வளர்ந்தது.

தொடக்கத்தில், காதலியைக் காணும் ஆர்வ மிகுதியால் கழிகளைக் கடக்கவோ, காவல்ல மீறவோ அஞ்சாத அவன், நாள் ஆக ஆக ஆங்கு வரத் தயங்கினான். அவனைக் காண் பதும் அரிதாகி விட்டது. இந்நிலை அவளைப் பெரிதும் வருத்திற்று. காதலனை ஒரு நாள் காணாமை நேரினும்

உயிரிழந்தவள்போல் உறுதுயர் கொள்ளத் தொடங்கினாள்; இந்நிலையில் அவன் பல நாள் தொடர்ந்து வாராமையாலே கலங்கிக் கண்ணீர் சொரிந்தாள்.

அம்மனக் கலக்கம் அவள் மேனி நலத்தை அழித்தது; மேனியின் பொன்னிறம் அழிந்து பசலை படர்ந்து பொலிவிழந்தது. மேனி மாற்றம் கண்ட ஊர்ப் பெண்டிர் அவள் கற்பொழுக்கத்திற்குக் களங்கம் கற்பித்துப் பழிக்கத் தலைப்பட்டனர்; அது அவள் அகத்துயரை மேலும் அதிகரித்தது; அது பொறாது இறந்து விடுவளோ என்னும்படியாகி விட்டது அவள் நிலை.

அவர் காதலுக்குத் துணை புரிந்து அவர் காதலை வளர்த்த தோழி அந்நிலையை உணர்ந்தாள். இளைஞன் விரைவில் வந்து வரைந்து கொண்டிலனாயினும், ஒரு நாளேனும் வந்து அவள் நலம் வினாவிச் செல்லினும் நன்றாம். அது அவளை மேலும் சில நாட்கள் வாழச் செய்யும் என நம்பினாள்; ஆனால் அவனோ அவர் வாழும் ஊர்வழியையும் மறந்து விட்டவன்போல் தோன்றினான்.

அதனால் அவள் அவன்மீது சினம் கொண்டாள்; பண்பு மிக்க பேரூரில் பிறந்தவன். அதனால் அவனும் பண்புடையவனாவன் என நம்பியே, அன்று அவன்பால் பரிவு காட்டினாள்; அதனாலேயே அவர் காதலுக்குத் துணை புரிந்தாள்; அப்பண்பு அவன்பால் இல்லை என்பதை இன்று உணர்ந்து உள்ளம் வருந்தினாள்; பிறந்த ஊர்ப் பண்பு அவன்பாலும் பொருந்தியிருப்பின் அவன் இவளை இந்நேரம் மணம் செய்து கொண்டு மனையற வாழ்வு மேற்கொண்டு பிற உயிர்களையும் வாழ்வித்துத் தானும் மகிழ்ந்து வாழ்வன்; ஆனால் அவன் அது செய்திலன்; தன்னாட்டுப் பெருங்குடிச் செல்வர்பால் காணலாம் சிறந்த பண்பினைப் பெறாத அவன்; அவர்பால் காணலாம் * குறைபாட்டினை மட்டும் அப்படியே பெற்றுளான்.

கடல் நீரில் நீந்தி மகிழ்ந்து வாழும் மீன் இனங்களை வலை வீசிப் பிடித்துக் கடல்நீரினின்றும் வெளிப்படுத்தியத னால் அவற்றின் உயிரைப் போக்கி, உயிரிழந்து போன அவற்றை ஊரார்க்கு எல்லாம் பகிர்ந்து கொடுத்துவிட்டு உயிர்க் கொலை புரிந்து விட்டோமே என்ற உணர்வு தானும் கொள்ளாது, கடற்கரை மணலில் களித்துக் கண்ணுறங்கும் அவன் நாட்டுப் பரதவர் கொடுஞ்செயல் அவன்பாலும் குடிகொண்டு விட்டது.

பெருங்குடியில் பிறந்த இவளைக் காதல் வலைவீசிக் கவர்ந்து கொண்டு காதல் மிகுதியால் மனைப்புறம் வந்தும், மேனி நலம் இழந்து மாறுபட்டும் வருந்துமாறு இவளை வருத்தி இவள் மேனி வேறுபாடு காணும் ஊரார் வாயெல் லாம் இவளைப் பழி கூறுமாறு அலராக்கிவிட்டு இவளுக்கு இத்தகைய இடர்ப்பாட்டினை உண்டாக்கி விட்டோமே என்ற உணர்ச்சி தானும் இன்றி தன் ஊரில் தலை மறைந்து மகிழ்ந்து வாழ்கின்ற இவனை என்னென்போம் என எண்ணிச் சினந்தாள்; அவன் கொடுமையை அவனுக்கு எடுத்துக் காட்டி இடித்துரைக்கத் துணிந்தாள்.

அத்துணிவோடு அவனூர் சென்று அவனைக் கண்டாள்; அவனைக் காணாமுன் அவன்பால் அவள் கொண்டிருந்த சினம், அவனைக் கண்டதும் எங்கோ சென்று மறைந்தது. அவன் அவள் காதலிக்குச் செய்யும் கொடுமைகளை விளங்க எடுத்துரைக்க அவள் வாய் வந்திலது. அதனால் அவனாட்டு இயற்கை வளத்தினை, இனிதெடுத்து பாடுவாள் போல், அவன் நாட்டு நுளையர்களின் கொடுஞ்செயலை எடுத்துக் கூறுமுகத்தான், குறிப்பு மொழிகளால் அவன் கொடுமையை அவன் உள்ளம் உணருமாறு செய்தாள்.

பின்னர் "அன்ப! அவள் உன்னைக் காணாமையால் காதல் நோய் மிகுந்து கலங்குகிறாள்; அக்கலக்க மிகுதியால்

அவள் மேனி, தன் பொன்னிறம் இழந்து பாழுற்று விட்டது; இந்நிலையில் நீ அவளை அறவே மறந்து விட்டாய்; இது நின் பெருமைக்குப் பொருந்தாது; ஒருநாள் வந்து அவளைக் கண்டு "நின் மேனி வாடி விட்டதே; வாடியது ஏனோ? என அவள் நலம் வினாவி வருதல் கூடாதோ? அதனால் உன் பெருமை அழிந்து விடுமோ?

உன்னை நாடுநரில் யாரேனும் கண்டுவிடின் உன் பெருமை என்னாம் என எண்ணி அஞ்சுகின்றனையாயின் அத்தகைய நிலை இப்போது உண்டாகாது.

எங்கள் காட்டுச் சோலைகள் காண்பவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கவின்பெற்று விளங்கும் காலம் இது. தழைத்துத் தளிர் ஈன்று தண்ணென்றாகி மக்கள் மனத்திற்கு மகிழ்ச்சியூட்டும் அச்சோலைகள், முத்துக்களைக் கொத்துக் கொத்தாக விளைத்து வைத்தாற்போல் அரும்பீன்று கண்ணிற்கு விருந்தளிக்கும் காட்சிச் செல்வமும் வாய்த்துளது.

அச்சோலையை இடையறாது நுகர மக்கள் எங்கெங்கிருந்தோ வருகின்றனர்; எவரெவரோ வந்து செல்கின்றனர்; அதனால் ஆங்கு வரும் உன்னை ஐயக் கண் கொண்டு பார்ப்பவர் எவரும் இலராவர்; அதனால் உன் பெருமைக்கும் அழிவு நேராது. ஆங்கு வருதல் எமக்கும் எளிது.

காட்டுச் சோலைக்கு வந்து காதலியைக் கண்டு அவள் நலம் வினாவின், அவளைச் சிலநாள் மேலும் வாழ்வித்த சிறப்பும் உனக்கு உண்டாம்; வருகின்றனையோ?" என வினாவுவாள்போல், அவன் அளித்த காதல் நோயால் அவள் படும் துயரையும், அது ஊரார் உணர்ந்து கொள்ளும் அளவு பெருகி விட்டதையும் இனியும் மணக்காது மறைந்து மறந்து வாழ்ந்தால் ஊரார் உரைக்கும் அலர், வேற்று

வரைவினைக் கொண்டு வந்து சேர்க்கும் என்பதை உணர்த்தி வரைவிற்கு வழி செய்து மீண்டாள்.

''நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அல்லலைக்
கடல்பாடு அழிய இனமீன் முகந்து.
துணைபுணர் உவகையர் பரத மாக்கள்
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி
உப்பு ஒய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பகடு ஒப்பக் குழீஇ
அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கிப்
பெருங்களம் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கலம் மல்கவீசிப்
பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுஉயர் திணி மணல் துஞ்சும் துறைவ!
பெருமை என்பது கெடுமோ? ஒருநாள்
மண்ணாமுத்தம் அரும்பிய புன்னைத்
தண்நறும் கானல் வந்து நும்
வண்ணம் எவனோ என்றனிர் செலினே?''

திணை ; நெய்தல்

துறை ; தலைமகற்குத் தோழி வரைவு கடாயிக் கூறியது.

புலவர் ; முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்.

1. வலந்த; கட்டப்பெற்ற; குறுங்கண்; சிறிய சிறிய கண்கள்.
2. பாடு; பெருமை;
3. பரதமாக்கள்; நெய்தல் நிலத்து மீன் பிடிப்பவர்கள்;
4. துவன்ற; கூடி இருந்து;

5. ஓய்; கொண்டு சென்று விற்கும்; உமணர் உப்பு வணிகர்;

6. ஒழுகை; வரிசையாகச் செல்லும்; நோன்பகடு; வலிய எருதுகள்;

7. அயிர்; நுண்மணல்;

8. வாங்கி: இழுத்து;

9. வறுங்கலம்; பிச்சை எடுக்கும் கலம்; மல்க; நிறைய; வீசி: வழங்கி;

10. பாடு; பங்கு; கொள்ளை சாற்றி; விலைகூறிவிற்று;

11. கோடு; கரை;

12. துஞ்சும்: உறங்கும்;

13. மண்ணா முத்தம்; முத்துக்கள் போலும் அரும்புகள்;

14. வண்ணம்; நிறம்: எவனோ: எந்நிலையில் உளது.

உள்ளுறை : கடலில் வாழும் மீனை நுளையர் அதனின்றும் வெளிப்படுத்தி, உயிர்போக்கி, கண்டவர்க் கெல்லாம் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, பின்பு உயிர்க் கொலை புரிந்துவிட்டோமே என்னும் இரக்கம் இன்றி மணல் மேட்டில் உறங்கினாற்போல், பெருங்குலத்தில் பிறந்த இவளை நீயும் வசமாக நீக்கி வருந்தி, வேறுபாடுகண்டு எல்லோரும் இவளைச் சூழ்ந்து கொள்ளுமாறு அலராக்கிப் பின்பு அத்தகைய நினைவேதும் இன்றி உன் ஊரில் உறங்கு கின்றாய் எனக்கூறியதாக உள்ளுறை கொள்க.

# 6. இறையனார் அகப்பொருள் உரை

இறையனார் அகப்பொருள் முதல் சூத்திர உரையில் உரை கண்ட வரலாறு பற்றிய விளக்கம் அளிக்கும் பகுதியில் "நக்கீரனால் உரைகண்டு, குமாரசுவாமியால் கேட்கப் பட்டது" எனவரும் தொடர்கொண்டு, இறையனார் அகப் பொருள் உரையாசிரியர் மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார் ஆவர் எனக் கொள்வர் சிலர்.

நக்கீரனார் கடைச் சங்கப்புலவர்; கடைச்சங்க இலக்கியங்களில் கட்டளைக் கலித்துறை இடம்பெறவில்லை; கட்டளைக் கலித்துறைக்குத் தொல்காப்பியரும் இலக்கணம் வகுக்கவில்லை; மேலும் கோவை எழுந்த காலம் கடைச் சங்க காலத்திற்கும் பின்னர் நானூறு ஆண்டுகள் கழிந்த பிற்காலம்; அங்ஙனமாக, கடைச்சங்க காலத்தவராகிய நக்கீரர், தமக்கு நானூறு, ஐந்நூறு ஆண்டுகள் பிற்பட்டுத் தோன்றிய, கோவையாரிலிருந்து கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களை மேற்கோள் காட்டியிருக்க இயலாது; ஆனால் இறையனார் அகப்பொருள் உரையில் கோவையாரின் கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் காட்டப்பெற்றுள்ளன.

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணங்களைக் கூறும் தொல்காப்பியம், இறவாது இன்று வரை கிடைக்கவும், "அரசனும் புடைபடக் கவன்று" என்னை, எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே; பொருளதிகாரம்

பெறேமேயெனின் இவைபெற்றும் பெற்றிலேம்'' எனக் கூறி வருந்தினான் என்பது பொருந்தாது.

"கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்து விடத்துப் பதந்தோறும் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான்; இருப்ப, ஆர்ப்பெடுத்து மெய்யுரை பெற்றும் இந்நூற்கு என்றார்.'' என்றும் "நக்கீரனார் உரை கண்டு குமாரசுவாமியால் கேட்கப்பட்டது'' என்றும் நக்கீரர், தம்மைத் தாமே மிகைப் புகழ்ந்து கொண்டு படர்க்கையில் நிறுத்திப் பேசினார் என்பதும் பொருந்தாது.

நக்கீரனார் இயற்றிய கடைச்சங்க நூல்களில் ஓரிரு சொற்களே, வடசொற்களாக, இவ்வுரையில் காணுமிட மெல்லாம் சிட்டர், பிராமணர், காரணிகர், குமாரசுவாமி மூத்திரபுரிடம் சுவர்க்கம், வாசகம் போலும் வடசொற்கள் பயில இடம் பெற்றுள்ளன.

இவை போலும் காரணங்களைக் காட்டி இவ்வுரை நக்கீரனார் செய்த உரையன்று. பிற்காலத்தில் பெயர் தெரியா யாரோ ஒருவர் செய்து நக்கீரனார் பெயர் சூட்டி விட்டார் எனக் கூறுவர் வேறு சிலர்.

யார் இயற்றிய உரையாயினும் இறையனார் அகப் பொருள் உரை நவில்தொறும் நயம் பயக்கும் நல்லுரை யாகும் என்பதில் ஐயம் இல்லை.

ஒரு நூலுக்கு உரை எழுதுவார், அந்நூலில் வரும் பா ஒவ்வொன்றையும் எடுத்துக் கொண்டு, அதில் வரும் ஒவ் வொரு சொல்லுக்கும், ஒவ்வொரு தொடருக்கும் தம் அறிவு ஆற்றல் துணை கொண்டு உரிய பொருள் உரைக்க வேண்டும்.

அவ்வாறு உரைக்கும் போது, அவற்றிற்குப் பிறர் என்னென்ன பொருள்களைக் கூறக் கூடும் என எண்ணிப்

பார்த்து அப்பொருள்களையெல்லாம் முதற்கண் கூறி விட்டுப், பின்னர், அப்பொருள்கள் உண்மைப் பொருள்களாகா என்பதற்கான காரணகாரியங்களை வரிசையாக எடுத்து வைத்து மறுத்தல் வேண்டும்.

அது மட்டுமன்று, தான் கூறிய பொருள் ஏற்கத்தக்க பொருள் அன்று என்பதற்குப் பிறர் என்னென்ன காரணங்களைக் காட்டக் கூடும் என்பதையும் எண்ணிப் பார்த்து அவற்றையும் எடுத்து வைத்துப் பின்னர், அக்காரணங்கள் எவ்வெவ் வகைகளால் ஏற்கத்தக்கன அல்ல என்பதையும் எடுத்துக் கூறி அத்தடைகளை உதறித் தள்ளுதல் வேண்டும்

இவ்வாறு தடை விடை மூலம் பொருள் கூறிச் செல்லும். நெறியினை இவ்வுரையாசிரியர், ஒவ்வொரு சொல்லுக்கும், ஒவ்வொரு தொடருக்கும் மேற்கொண்டு உரை கூறிச் செல்லும் அழகு இவர்தம் ஆராய்ச்சித் திறத்திற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாம். உதாரணத்திற்கு ஒன்று.

களவொழுக்கமாவது கந்தருவ ஒழுக்கமாம் என முதல் சூத்திரத்தில் கூறி. அதற்கு விளக்கம் உரைக்கப் புகுந்த "அதுவே" எனத் தொடங்கும் இரண்டாவது சூத்திரத்தில் வரும் "தானே அவளே" என்ற தொடருக்குப் பிறர் கூறும் உரைகளை மறுத்துத் தான் கூறிய உரையை நிலைநாட்டும் அருமை பாராட்டிற்கு உரியது.

காதலன் காதலி என வேறு பிரித்து அறியப்படாதவர் கந்தருவர் என்பது அனைவரும் அறிந்த ஒன்று.

ஆகவே, களவு, கந்தருவ வழக்கத்தோடு ஒக்கும் என்று கூறியதனாலேயே, அவனும் அவளும் வேறு பிரித்து அறியப் படாதவர்; என்பது புலனாகவும், அவர்கள் இருவரும் அன்பாலும், குணத்தாலும், கல்வியாலும், உருவாலும் திருவாலும் ஒருவரோடொருவர் வேறு பிரித்து அறியப்படார் என்பது உணர்த்தவே, "தானே அவளே" என்றார், எனக் கூறின், கூறியது கூறலாம்.

ஆகவே அவ்வுரை பொருந்தாது எனவும், கந்தருவ ஒழுக்கத்தில், கந்தருவ ஆணும் பெண்ணும் தமியராய் இருந்தே புணர்வர் ஆதலின், களவு ஒழுக்கம், கந்தருவ ஒழுக்கத்தோடு ஒக்கும் என்று கூறவே, அவளும் அவனும் தமியராய்ப் புணர்வர் என்பது தானாகவே புலப்படும்.

ஆகவே அவன் இளைஞர் கூட்டத்திலிருந்து நீங்கித் தனியனாய் வந்தும், அவள் தோழியர் கூட்டத்திலிருந்து நீங்கித் தனியளாய் வந்தும் புணர்வர் என்பது உணர்த்தவே "தானே அவளே" என்றார், எனக் கூறுவதும் கூறியது கூறலாம்.

ஆகவே அவ்வுரையும் பொருந்தாது எனப், பிறர் கூறும் உரைப் பொருள்களை மறுத்து விட்டு, உருவாலும், திருவாலும், அறிவாலும், ஒழுக்கந்தாலும் ஆடவருள் குறைந்தவர் அல்லது ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவன் என அவனை ஆடவரிலிருந்து பிரித்து உணர்த்தவும், அது போலவே, அவளை மகளிரிலிருந்து பிரித்து உணர்த்தவுமே, "தானே அவளே" என்றார் என்று தான் கூறும் பொருளை முதற்கண் நிலைநாட்டி விட்டுப் பின்னர், அவ்வுரைக்குக், "கந்தருவ ஒழுக்கத்தோடும் ஒக்கும் என்று கூறியதனாலேயே, எவ்வகையாலும் குறைபாடு இலாதவர் என்பது பெறப்படும். ஆகவே அவ்வாறு கூறுவதும் பொருந்தாது" எனக் கூறும் மறுப்புரைக்குக் கந்தருவர் எவ்வகையாலும் குறைபாடு இலாதவர் எனக் கோடல் முறையாகாது. அறிவுக் குறைபாடும், அருள் உணர்வுக் குறைபாடும் அவர்க்கு உண்டு. ஆகவே, கந்தருவ ஒழுக்கத்தோடு ஒக்கும் என்பதினாலேயே, அவனும் அவளும் ஒப்பாரும் மிக்காரும் இலாதவர் என்பது பெறப்பட்டு விடாது.

ஆகவே அதைத் தனியே எடுத்துக் கூற வேண்டியது இன்றியமையாதது என அத்தடைக்கு விடையளித்து விட்டுத் தான் கூறிய பொருளே முடிந்த பொருளாம் என முடித்திருக்கும் நயம் வியந்து பாராட்டிற்கு உரியது.

இவ்வாறு தடை விடைகளால் பொருள் விளக்கிச் செல்லுங்கால் அப்பொருளை மேலும் எளிதாக்குவான் வேண்டி சிலபல உவமைகளை மேற்கொள்வதும், மேற்கொள்ளும் உவமைகளை மிகமிக உயர்ந்தனவாகக் கொள்வது சிறந்த உரைக்கு இலக்கணமாம். அகப்பொருள் உரையாசிரியர் இத்துறையிலும் சிறந்து விளங்குகிறார்; இவ்வொரு சூத்திரத்திற்கு உரை வழங்குவதற்கு உள்ளாகவே பத்துக்கும் மேற்பட்ட உவமைகளை அடுக்கடுக்காக மேற்கொண்டு உரைக்கு மெருகூட்டியுள்ளார்.

தலைமகளைக் காணும் காட்சியும் தலைமகனுடைய ஞான வொழுக்கக் குணங்களது தன்மை அறிவும் ஒரு சேர நிகழும் என்பதை விளக்க, இருட்டகத்து விளக்குக் கொண்டு புக்கக்கால் விளக்கு வாராத முன்னரும் இருள் நீங்காது விளக்கு வந்த பின்னரும்; இருள் நீங்காது விளக்கு வருதலும் இருள் நீக்கமும் உடனே நிகழும் என்பதையும்,

"யாயும் யாயும் யாராகியரோ;" என்பது போல் எங்கோ பிறந்த அவனும் எங்கோ பிறந்த அவளும் அப்பொழிலிடை ஒன்று கலந்த நிகழ்ச்சியை விளக்க வடகடல் இட்ட ஒரு நுகம் ஒரு துளை தென்கடல் இட்ட ஒரு கழி சென்று கோத்த நிலைமையையும்,

காதலன் உடன் இருக்கக், காதலிக்கு ஆற்றாமை உண்டாகாது என்பதை விளக்க நீருடை நிலத்து நிலவந்த நீள்மரம் வெப்பத்தால் தெறப்படா நிலைமையையும் உவமை காட்டிச் செல்லும் கவின் கற்றுக் களித்தற்கு உரியவாம்.

தடைவிடைகளைக் கையாண்டும், ஏற்புடைய உவமைகளை, மேற்கொண்டும் உரைவிளக்கம் கூறும் நிலையில் இடையிடையே வரும் சிற்சில சொற்களுக்கும், சிறுசிறு தொடர்களுக்கும் முடிந்த முடிவான பொருள் கூறிச்

செல்வதும் உரைக்கு ஓர் அழகாம். உரையாசிரியரின் தெளிந்த அறிவுடைமைக்கு ஓர் அகச் சான்றாம். அகப் பொருள் உரையாசிரியர் அத்துறையிலும் முன்னிலையில் நிற்கின்றார்.

எப்பொருளாயினும் அப்பொருட்கண் நின்று அம் மெய்ம்மையை உணர்வது அறிவு; காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம் நிறை; ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல் ஓர்ப்பு; கொண்ட பொருள் மறவாமை கடைப்பிடி; பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு * தன்மை நாண்; கொளுத்துக் கொண்டு கொண்டது விடாமைமடம்; காணப் படாததொரு பொருள் கண்ட விடத்து உண்டாவது அச்சம்; பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை பயிர்ப்பு எனச் சொற் களுக்குக் கூறியிருக்கும் பொருள் விளக்கமும்,

தலைமகனும் தலைமகளும் தமியராய், ஒரு பொழிலகத்து எதிர்பட்டுத் தம் உணர்வினர் அன்றி, வேட்கை மிகவினால் புணர்வது காமப் புணர்ச்சி; புலவரால் கூறப்பட்ட இயல்பினாலும் கந்தருவ வழக்கத்தோடு ஒத்த இயல்பினாலும் புணர்வது இயற்கைப் புணர்ச்சி; முயற்சியும் உள்ப்பாடும் இன்றித், தெய்வத் தன்மையால் புணர்தலின் தெய்வப் புணர்ச்சி; காதலன் நலம் காதலியினால் முன்னுற எய்தப்பட்டமையானும், காதலி நலம் காதலனால் முன்னுற எய்தப் பட்டமையானும் முன்னுறு புணர்ச்சி எனச் சொற்றொடர்களுக்குக் கூறியிருக்கும் பொருள் விளக்கமும் போற்றுதற்கு உரியன.

நூலாசிரியரோ, உரையாசிரியரோ மேற்கொள்ளும் சில சொல்லாட்சியும், சில பொருளாட்சியும், ஏற்றுக் கொள்ளப்பட்ட இலக்கணவிதி, இலக்கண மரபுகளுக்கு முரண்பட்டனபோல் தோன்றினும், அவற்றை ஒருவாறு ஏற்புடைய அமைதி கூறி ஏற்றுக் கொள்ளச் செய்வதே பின் வரும் ஆசிரியர்களின் நீங்காக் கடமையாகும். இதையும்

அகப்பொருள் ஆசிரியர் மிக நயம்படச் செய்து முடித் துள்ளார். "தெய்வப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி, இயற்கைப் புணர்ச்சி. என்பனவற்றுள் ஒன்று சொல்லாது காமப் புணர்ச்சி என்றே கூறிய காரணம் என்னையெனின் பலகாரணத்தினாய பொருளை ஒரு காரணத்தினாற் சொல்லுவது சிறப்புடைமை நோக்கி என அவர் கூறும் அமைதியின் அழகைக் காண்க.

அரசன் அவன் நிலைக்கு ஏற்ப உயர்ந்த ஆடை அணி களை அணிவதும் அவன் கீழ்ப் பணிபுரியும் ஏவலாளன், அவனுக்கேற்ற ஆடை அணிகளையே ஏற்பதும் உலகியல்; அதுபோலவே மிக உயர்ந்த ஒரு நூலுக்கு உரையெழுதும் உரையாசிரியர், அவ்வுரை இலக்கியச் செறிவு வாய்ந்த சிறந்த நடையாக இருக்கவே விரும்புவர்; அகப் பொருள் உரை, எதுகையும் மோனையும் இனிய ஓசையும் நிறைந்த அழகு நடையாகவே அமைந்துளது. அவ்வுரையைப் படிக்குங்கால், நாம் ஓர் இலக்கண நூல் படிக்கின்றோம் என்ற நினைவே எழுவதில்லை; மாறாகச் சிறந்த ஓர் இலக்கிய உலகில் புகுந்திருப்பது போன்ற உணர்வே உண் டாகின்றது.

இளையர் தற்சூழச் செல்லும் தலைமகன் செலவு குறிக்கும் பகுதியும் தாரகை நடுவண் தண்மதி போலச் செல்லும் தலைமகள் செலவு குறிக்கும் பகுதியும் இளமையில் ஆடுவது நோக்கித் தலைமகள் நிற்பண்தக் குறிக்கும் பகுதியும் காமன் போலச் சென்று, தலையகன் தலைமகள் முன் நிற்பதை உணர்த்தும் பகுதியும், பிறவும், உரையாசிரியரின் இலக்கியச் செறிவு வாய்ந்த உரைநடைக்குச் சிறந்த எடுத் காட்டுகளாம்.

ஒரு சூத்திரத்துக்கு உரை எழுதப் புகுந்த இவ் வுரையாசிரியர் இலக்கண விளக்கம் அளிப்பதோடு அமை யாது அவ்விளக்கத்திற்கு எடுத்துக்காட்டாக மேற்கொண்ட

ஓர் இலக்கியச் செய்யுளுக்கும் விரிவான விளக்க உரைகளைக் கூறியிருப்பது அவர்தம் இலக்கியப் பேரறிவுக்குச் சிறந்த உதாரணமாகும்.

நயப்பு என்ற துறையை விளக்க அவர் காட்டிய "வேலும் என நின்று இகல் மலைந்தார்" என்ற கோவைச் செய்யுளில் வந்திருக்கும் ஒவ்வொரு சொல்லையும் எடுத்துக் கொண்டு விளக்கம் அளித்துச் செல்லும் முறை வியந்து பாராட்டற்கு உரியது.

பொதியில் என்பதற்கு எல்லாத் தேவர்களுக்கும் பொதுவாகிய இல் என்றும் மெல்லியல் என்பதற்கு மென்மை பெண்டிர்க்கு இயல்பு, அதனைத் தனக்குச் செய்து கோள் அன்றி இயல்பாக உடையாள் என்றும், செந்துவர்வாய் என்பதற்குச் செம்மையைத் தனக்கு மிகவுடையவாய் என்றவாறு, செம்மை உடையார் என்பது உலகத்துத் தம் குணங்களை மறையாது ஒழுகுவாரை என்றும் விளக்கம் அளிக்கும் வனப்பினைக் காண்க.

இவ்வாறு தருக்க நெறி நின்று வாதப் பிரதி வாதங்களை முன் வைத்துத் தம் பொருளை வலியுறுத்திக் கெஞ்சும் நிலையிலும் பொருள் விளக்கம் வேண்டி அழகிய உவமைகளை ஆளும் நிலையிலும், சொல் சொற்றொடர்களுக்குப் பொருந்தும் பொருள் உரைத்துச் செல்லும் நிலையிலும், இலக்கண அமைதியினை எடுத்தியம்பும் நிலையிலும். தென்றற் பூங்காற்றுப் போலும் தீந்தமிழ் நடை வழங்கு முறையிலும், அகப்பொருள் உரையாசிரியர்க்கு நிகர் அவரே எனக் கூறுவதே சாலப் பொருந்தும்.

# 7. மெய்யம் மலிந்து நகைத்தேன்!

சாரல் சூழ்ந்த மலைநாட்டு மகன் ஒருவன், குறவர் குடிக்குமரி ஒருத்தியைக் கண்டு காதல் கொண்டான். தங்கள் குலக்கடவுளாய முருகன் உறைவதால் பெருமை பெற்ற மலையுச்சியில் தோன்றிய அவன் நாட்டு அருவிகள், கீழே பாய்ந்து அவள் நாட்டுக் காட்டை வளமுறச் செய்வது போலவே, ஆற்றல் அருள் முதலிய அரிய பண்புகளால் சிறந்த பெரியோனாய அவன், தன்பால் பேரன்பு கொண்டு, தன்னை வாழ்விக்க வந்தமை கண்டு, அப்பெண்ணும் அவன்பால் காதல் கொண்டாள். இருவரும் தம் பெற்றோர் அறியாவாறு தம் காதலை வளர்த்து வந்தனர்.

அவர் காதலும் ஒருவரை இழந்து ஒருவர் உயிர் வாழ்தல் இயலாது ஒருவரை ஒருவர் ஒரு நாள் காணாது போயினும் அவர் உயிர் தீர் துயர் கொள்ளும் எனக் கூறுமளவு பெருகி விட்டது. இந்நிலையில், அப்பெண்ணைப் பெற்ற தாய், மகள் மணப்பெறு பருவத்தை அடைந்து விட்டாள்; இனி அவளை முன்போல் மனைப்புறம் போக விடுதல் கூடாது எனக் கொண்டு, அவளை இற்செறித்து விட்டாள். அதனால், முன்போல் கண்டு மகிழ்தற்கு இயலாது காதலர் இருவரும் கலங்கினர். அக்கலக்கம் சின்னாளவரையே இருந்தது.

பகற்போதில் காண்பதற்கு இயலாத தன் காதலியை இரவில் காணத் துணிந்தான் இளைஞன். அவ்வாறே,

இரவில் எல்லோரும் உறங்கிய பின்னர், அவன் அவளூர் அடைந்து, அவள் மனையின் ஒருபால் ஒளிந்திருந்து அவளை எதிர் நோக்கியிருப்பதும், தன் காதலன் மார்பில் கிடந்து மணக்கும் சந்தன மணமும், மலர்மாலை மணமும் தன் மனைப்புறத்தில் மணக்கக் கண்டு, அதற்கான காரணத்தைக் காண மனைப்புறம் வரும் அவள், ஆங்குத் தன் காதலனைக் கண்டு மகிழ்வதும் வழக்கமாகி விட்டன.

காதலன் தரும் இன்பத்தில், தங்கள் களவு வாழ்க்கையால் உண்டாகவிருக்கும் கேட்டினை உணர மறந்த அவள் சின்னாட்கள் கழிந்ததும் உணரத் தொடங்கினாள். அரிய காவல் அமையப் பெற்றது தன் ஊர்; அயலார் யாரேனும் தன்னகர்க் காவலர் கண்ணில் பட்டு விடுவாராயின் அவர் உயிர் பிழைத்துப் போதல் அரிதினும் அரிதாம்.

மேலும் தன் மனையில், தாய், உறக்கத்தை மறந்து தன்னைக் காத்துக் கிடக்கிறாள். அவளை ஏமாற்றிவிட்டு, அவனை வந்து காண்பது தனக்கும் அரிதாக உளது. காதலன் காவலர் கையிலும் தான் தாயின் கையிலும் அகப் பட்டுக் கொண்டால் தங்கள் நிலை என்னாம் என எண்ணிப் பார்த்தாள் ஒருநாள்; அன்று முதல் அவள் அக்கவலையால் வருந்தி, உடல் தளர்ந்து போனாள்.

மகளின் தளர்ச்சியைக் கண்ணுற்ற தாய் அதற்கு யாது காரணம் எனத் தனக்கு வேண்டியவர்களிடத்திலெல் லாம் வினவினாள். கன்னி மகளிரின் காதல் உள்ளத்தை உணர்ந்து கொள்ள மாட்டாத அவ்வூர் கிழங்கள், அது தெய்வக்குற்றம் எனக் கூறினர்.

அது கேட்ட தாய், உடனே, அக்குறை தீர வெறியாட்டு விழாக் கொண்டாட முனைந்தாள். தன்னைப் பகைப்பவர் களைப் பாழாக்குவோன் முருகன் என்ற நினைவால், மகளைப்பற்றி வருத்தும் நோயையும் போக்குவன் என

நம்பி, தாய் வெறியாட முனைவது கண்டு அப்பெண், ஒருபால் தனக்குள்ளே நகைத்துக் கொண்டாள்; முருகன், பகைவரைத்தான் வருத்துவன் அவன் அன்பரையும் அவன் வருத்துவனோ? நான் அவன் அடிமை: அவ்வாறாகவும் அவன் என்னையும் வருத்துவான்—எனக் கருதுவது என்ன அறியாமை என அவர்களை எள்ளி நகைத்தாள், அந்நகை அவள் உள்ளம் உணர்த்திய ஓர் ஐயத்தினை உணர்ந்ததும் கழிந்து மறைந்தது; தன்னைப்பற்றி வருத்தும் நோய் முருகனால் வந்ததன்று; அதனால், அது வெறியாடுவதால் நீங்காது.

இது உறுதி. அவ்வாறாயின் தாய் வெறியாட்டு விழா நிகழ்த்த, அது நிகழ்த்திய பின்னரும் தன் நோய் நீங்காமையைக் காணின் அவளும் இவ்வூர்க்கிழங்களும் என் ஒழுக்கத்திற்கு இழுக்கம் கற்பித்துப் பழிப்பர்; பழியேதும் நேர்ந்து விடா வண்ணம் என்னைத் தாம் விரும்பும் ஒருவனைப் பிடித்து வந்து மணம் செய்து கொடுக்கத் துணிவர்.

அந்நிலை உண்டான பின்னர் நான் எவ்வாறு உயிர் வாழ்தல் இயலும் என்ற எண்ணம் எழவே அவள் துயர்க் கடலில் ஆழ்ந்து போனாள்.

மக்ளின் துயர் மேன்மேலும் பெருகக் கண்ட தாய் வெறியாட்டினை விரைந்து முடிக்க விரும்பினாள்; அன்றே அதை முடித்துவிடக் கருதினாள்; வேலனை அழைத்தாள்: வெறியாடும் இடத்தை அழகுற ஆக்கினாள்; இடையே வேலை நாட்டி, அதற்கு மாலை சூட்டினாள்.

வேலன் வாய் திறந்து உரத்த குரல் எடுத்து, முருகன் புகழைப் பாடிப் பரவினான். ஆட்டுக் குட்டியை அறுத்துப் பலி கொடுத்தார்கள்; அவ்வாட்டுக் குருதியோடு கலந்த தினைச்சோற்றைக் கூடைகளில் இட்டு வழிபட்டனர்; இவ்வாறு இரவின் இடையாமத்தில், வெறியாட்டுவிழா நடைபெற்றுக் கொண்டிருந்தது.

அப்பெண்ணின் நினைவு ஆங்கு இல்லை. விழா முடிவில் தன் நோய்தணியா தாயின் தன் நிலை என்னாவது என் எண்ணித்துயர் உற்றுக் கிடந்தாள். அப்போது, ஆங்கு, அவள் அறிந்த அம்மணம் வீசிற்று. தலை நிமிர்ந்து சுற்றிச் சுற்றிப் பார்த்தாள்.

களிற்று யானை இறைச்சிபால் காதல் கொண்டபுலி, அக்களிறு தப்பிப் போகாவாறு, அதை எப்படியாவது கொன்று வீழ்த்த வேண்டும் என்ற கருத்தால், அது கண்டு அஞ்சி கண்டு ஒடி விடாவாறு, ஆங்காங்குள்ள புதர்கள் தோறும் ஒளிந்து ஒளிந்து, அதே நேரத்தில், களிற்றின் மீது சென்ற தன் கண்பார்வை தப்பாது பின் தொடர்ந்து செல்வது போல், தன் காதலன், தன் வீட்டுக் காவலர் அறிந்து கொள்ளாவாறு ஒளிந்து ஒளிந்து வருவதைக் கண்டாள்.

உடனே, அங்குள்ளார் அறிந்து கொள்ளாவாறு, அவ்விடத்தை விட்டு நீங்கி காதலனை அடைந்து சிறிது நேரம் இருந்து இன்புற்றாள், மீண்டும் பிறர் அறியாவாறு விழாக் களத்தை அடைந்து விட்டாள்.

காதலனைக் கண்டு களிப்புற்றமையால் அவள் மேனியைப் பற்றி வருத்திய நோய் மறைந்திருந்தது. விழா முடிந்தது; தாய் தன் மகளை நோக்கினாள். அவள் மேனி நோய் நீங்கித் திகழ்வதைக் கண்டாள், வெறியாட்டின் பயன் அது என உணர்ந்து மகிழ்ந்தாள்.

அன்று தனக்கு நேர இருந்த கேடு, ஒருவகையால், நீங்கினமை கண்டு அப்பெண்ணும் மகிழ்ந்தாள். காதலன் வரவால் நோய் நீங்கவும், தாய் அதை வெறியாட்டின் விளைவு எனக் கருதுவது கண்டு, அவள் அறியாமையை எண்ணி அவள் உள்ளம் நகைக்கவும் செய்தது. ஆனால் அம்மகிழ்ச்சியும் நெடிது நிற்கவில்லை.

வெறியாடு களத்திற்கு, வந்த காதலன் வாளா வந்திலன்; தன் நாட்டு மலைவளர் சந்தனக் குழம்பு மார்பில் பூசப்பெற்று மணக்க, தன் நாட்டில் அடைதற்கு அரிய மலைக் குகைகளில் மலரும் இயல்பினவாய மலர்களால் ஆன மாலையைச் சூழ்ந்து பறக்கும் வண்டுகளின் ரீங்காரம் ஓ என ஒலிக்க வந்திருந்தான். அப்புது மணத்தையும், புதிய ஒலியை யும் என்னைப் போலவே அவ்விழாக்களத்தில் வந்திருந் தோரில், வேறு யாரேனும் உணர்ந்து, அவற்றிற்கான காரணத்தைக் காண முற்பட்டிருந்தால் என்னாகியிருக்கும் எனக் கவலையுறத் தொடங்கினாள்.

அவ்வாறு அவள் கவலையுற்றுக் கிடக்கும்போது அவள் தோழி ஆங்கு வந்தாள். வந்தவள்பால் தன் உள்ளத் துயரை உரைத்து வருந்தினாள். அவள் துயர் நிலை கண்ட தோழி,

"பெண்ணே! உன் துயர் நீங்க வேண்டுமாயின், அது உங்கள் திருமணம் ஒன்றினால் ஆகும். ஆகவே, திருமணத்தை விரைந்து முடித்துக் கொள்ளுமாறு உன் காதலனுக்கு உணர்த்தல் வேண்டும். களவின்பத்தில் ஆழ்ந்து கிடக்கும் அவன் உள்ளத்தில் உன் வேண்டுகோள் எளிதில் இடம் பெறாது. ஆகவே அவன் உன் துயர் நிலையை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்; அதுவும் நீ உன் வாயினால் உரைக்க உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்; அதற்கு நான் ஒரு வழி காணுகிறேன்; அஞ்சாதே" எனக் கூறித் தேற்றினாள்.

இரண்டொரு நாள் கழித்து, ஒருநாள் இரவு இளைஞன் வழக்கம்போல் வந்து ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருந்தான். அதைக் கண்டு கொண்ட தோழி தன் அருகில் கிடந்து வருந்தும், அப்பெண்ணை நோக்கி, "பெண்ணே! இவ்வாறு வருந்தும் நீ, அன்று நம் தாய் வெறியாட்டு நிகழ்த்திய பொழுது, அது கண்டு அஞ்சுவதற்குப் பதிலாக நகைத்து மகிழ்ந்தாயே, அது ஏன்? அவ்வாறு நகைக்க உன்னால் எப்படி முடிந்தது?" என வினவினாள்.

உடனே, அப்பெண் அன்று நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் நிரலே எடுத்து உரைத்துவிட்டு, "காதலர் வரவால் என் நோய் நீங்கிற்று; அதை உணர்ந்து கொள்ளும் அறிவு அவ்வேலனுக்கு அழிந்து விட்டது; அதை நினைத்துக் கொண்டேன்: வயிறு வலிக்க நகைத்தேன்" எனக் கூறிக் களவு வாழ்க்கையால், ஒவ்வொரு நாளும் நான் படும் துன்பத்தை, அவன் உணருமாறு செய்தாள்.

அவள் கூறியன கேட்ட அவன், அன்று நடந்ததை உடனிருந்து கண்ட தோழி, இன்று கேட்டது, தான் அறிந்து கொள்ளும் கருத்தோடு அன்று: அதை நான் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்; உணர்ந்து களவொழுக்கத்தைக் கைவிட்டு வரைந்து கொள்ளற்கு விரைய வேண்டும் என்ற கருத்தாலாகும் என உணர்ந்தான்: அவள் கூறியதில் உண்மையும் உளது எனக் கொண்டான்; உடனே அவன் மனமும், மணம் நோக்கி விரைந்தது.

"அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும்
கணங்கொள் அருவிகான் கெழு நாடன்.
மணங்கமழ்வியன் மார்பு அணங்கிய செல்லல்
இதுவென அறியா மறுவரற் பொழுதில்
படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேள் பேணத் தணிகுவள் இவள்என
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களன் நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப், பலி கொடுத்து,
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்
ஆரம் நாற, அருவிடர்த் ததைந்த
சாரல்பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்று இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்

ஒளித்து இயங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவலர் அறியாமைத்
தன்னசை உள்ளத்து நம்நசை வாய்ப்ப
இன் உயிர் குழைய முயங்குதொறும் மெய்ம்மலிந்து
நக்கனென் அல்லனோ, யானே, எய்த்த
நோய்தணி காதலர் வரவு ஈண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே?''

திணை : குறிஞ்சி

துறை : தலைமகன்சிறைப்புறத்தானாகத் தோழியால் சொல்லெடுக்கப்பட்டுத் தலைமகள் சொல்லியது.

புலவர் ; வெறி பாடிய காமக் கண்ணியார்.

1. அணங்கு — தெய்வம்.
2. கணங்கொள் — கூட்டமான, கான்கெழு = காடு பொருந்திய
3, அணங்கிய — வருந்திய; செல்லல் — நோய்.
4. மறுவால் — மனக் கவலையுற்ற
5. படியோர் — பகைவர். தேய்த்த = அழித்த.
9. சிலம்ப — ஒலிக்க
12. ஆரம் — சந்தனம் விடர் — குகை. தழைந்த மலர்ந்த
13. பட — ஒலிக்க
19. எய்த்த— வருந்திய
21. உலந்தமை — அழிந்தமை.

# 8. திருமுருகாற்றுப்படை

## அறிமுகம்

திருமுருகாற்றுப் படை, வீடுபேறு அடைதற்கு உரிய நல்லூழ் உடையான் ஒருவனை, அவ்வீடு பேற்றினை பெற்றான் ஒருவன், முருகக் கடவுளிடத்தே செல்க: சென்றால் வீடுபேறு பெறுகுவை'' என வழி கூறியதாகப் பாடப்பட்டுள்ளது. பத்துப் பாட்டில் வரும் பொருநராற்றுப் படை முதலியன எல்லாம், பொருளைப் பெறுவோர் பெயரால் வழங்கப்பட்டுள்ளன. ஆனால் திருமுருகாற்றுப் படை பொருள் தரும் தலைவன் பெயரால் வழங்கும் சிறப் புடையது. இதற்குப் புலவராற்றுப் படை என்றோர் பெயரும் இருந்தது என்பது, ''இதனைப் புலவராற்றுப் படை என்று உயர்ந்து உணர்ந்து பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படை என்னும் பெயரன்றி அப்பெயர் கூறு வார்க்கு முருகாற்றுப்படை என்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமை மறுக்க'' (முருகு : 295 : உரை) என்னும் நச்சினார்க்கினியர் உரையால் தெளிவாகும்.

தெய்வ யானையின் கணவன்.

நீல வண்ண நீர் நிறைந்த கடலில், காலைப் போதில் அடிவானத்தில். செந்தழல் பிழம்பாய் செந்நெருப் புருண்டையாய் ஞாயிறு தோன்ற, அதன் செவ்வண்ணக் கதிர்கள் வரிசை வரிசையாக அதைச் சுற்றி எழும் காட்சி கண்ணுக்கு விருந்தளிக்கும் கவின்மிகு காட்சியாகும்.

நீல வண்ணத் தோகையினை விரித்து நிற்கும் மயில் மீது, செம்மேனிச் செம்மானாகிய செவ்வேள் முருகன் வீற்றிருக்கும் காட்சியும், கடலிடை ஞாயிற்றின் காட்சி போல் கண்ணுக்கு விருந்தளிக்கும் கவின் மிகு காட்சியாம்.

மயில்மீது முருகன் காட்சியை அவன் அன்பர்களுக்குக் காட்ட விரும்பிய புலவர் நக்கீரர் கடலிடை ஞாயிற்றைக் காட்டி விளக்கி இருக்கும் திறம் நயந்து பாராட்டற்கு உரியது.

கடலிடை தோன்றும் ஞாயிறும் உலகத்தை வாழ் விப்பான்; மயில்மீது உலாவரும் முருகனும் உலகத்தை வாழ்விப்பான்; ஆகவே இவ்விருபெரும் காட்சிகளைக் காணும் பேறு பெற்றவர் அனைவரும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து போவர். முருகனின் பேரொளிப் பிழம்பாய்ச் சேணெடுந் தொலைவும் சென்று ஒளிவீசும் அவ்வொளியைக் கண்விழித்துக் காணமாட்டாது, கண் இமைகளைக் குவித்துக் கொண்டு, அகக் கண்களால் காண்பர் அன்பர்கள். அத்தகு ஒளியினை உடையான் முருகன்.

அப் பேரொளிப் பெருமானைக் கண்ட அன்பர்கள் அவன் அருள் வேண்டி அவனைப் பணிந்து நிற்பராயின், அவர்க்கு வந்துள்ள துயர் எவ்வளவு பெரியதாயினும் அதைத் துடைத்து எறிந்து விட்டு அன்பர்களைக் காக்க வல்ல, கால் முதலாம் உரன்மிகு உடல் அமையப் பெற்றவன் முருகன்.

அவ்வாறு அன்பர்களுக்கு அருள்பாலிக்குங்கால் அதற்குத் தடையாக நிற்பார் எத்துணை வலியராயினும் அவர்களை அழித்து ஒழிக்க வல்ல ஆற்றல்மிகு கைகளை உடையவன். அக்கைகள் மலைகளையும் பொடிப்பொடியாக் கும் பேராற்றல் வாய்ந்த இடியேற்றினும் மிக்க பயு ப

டையன. அத்தகையான் யார் எனின், அருட் கற்புடை யாளும், அவ்வக அருளை வெளிக்காட்டும் ஒளி விளங்கும் நெற்றியை உடையாளும் இந்திரன் மகளுமான தெய்வ யானையின் கணவன் ஆவன்.

"உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடல் கண்டாங்கு
ஓவு அற இமைக்கும் சேண் விளங்கு அவர் ஒளி
உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன் தாள்
செறுநர்த் தேய்த்த செல் உறழ் தடக்கை" (1-5)

பொருள் : உலகம் உவப்ப—உலகத்து உயிர்கள் எல்லாம் வியந்து மகிழ' பலர் புகழ் ஞாயிறு—உலகத்து அனைத்து சமயத்தவராலும், அனைத்து நாட்டவராலும் புகழப்படும் ஞாயிற்றை. கடல் கண்டாங்கு—கடலின் அடிவானத்தே கண்டாற்போல் ஓவு அற—இருவகை இந்திரியங்களும், தாம் செல்லுதற்குரிய பொருள்கள் மேல் சென்று தங்குதல் இல்லையாக இமைக்கும்—கண் இமைத்துப் பார்ப்பதற்குக் காரணம் ஆகும். சேண் விளங்கு அவர் ஒளி—கட்புலனார் நோக்குவார் கண்ணிடங்கள் எல்லாவற்றினும் சென்று விளங்கும் ஒளி விளையும்,

உறுநர் தாங்கிய—தன்னை வந்தடைந்த அடியார் களின் துன்பங்களைப் போக்கி அவர்களுக்கு அருள் செய்த மதன் உடை—அழிகினை உடைய நோன்தாள்—ஆற்றல் மிக்க கால்களையும், செறுநர் தேய்த்த—அழித்தற்கு உரியவர் களை அழித்த, செல் உறழ்—இடியேற்றினும் ஆற்றலில் மேம்பட்ட, தடக்கை—வலிமைமிகு கைகளையும் உடைய. மறுஇல் கற்பின்—மறக்கற்பு இல்லாத அறக் கற்பினையும். வாள்நுதல் கணவன்—ஒளி பொருந்திய நெற்றியினையும் உடைய இந்திரன் மகள் தெய்வயானையின் கணவனே!

விளக்கவுரை : நூல்கள், மங்கல மொழிகளில் ஒன்றான "உலகம்" என்ற சொல்லைத் தனித்தேனும் அடை எடுத்தேனும். உலகம் எனப் பொருள்படும் சொற்கள் தனித்தேனும் அடை எடுத்தேனும் தொடங்கப்படுதல் வேண்டும் என்பது மரபு,

"உலகம் திரியா ஓங்கு உயர் விழுச்சீர்" (மணி: 1:1)

"உலகெலாம் உணர்ந்து" (பெரிய புராணம் ;
கடவுள் வாழ்த்து)

"உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்"
(கம்பராமாயணம் : கடவுள் வாழ்த்து)

இவற்றில் "உலகம்", என்று தனித்தே முதற்கண் வந்துளது.

நளந்தலை உலகம்" வளைஇ (முல்லைப்பாட்டு ;1)

"மூவா முதலா உலகம் (சீவக சிந்தாமணி , 1)

"நீடாழி உலகம்" (வில்லி பாரதம் : கடவுள் வாழ்த்து)

இவற்றில் "உலகம்" என்ற சொல் அடையடுத்து வந்துளது.

"வையகம் பனிப்ப" (நெடுநல்வாடை : 1) இதில் உலகம் எனும் பொருள்படும் சொல் தனித்து முதற்கண் வந்துளது.

"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை!' (சிறுபாணாற்றுப்படை : 1) "மாநிலம் சேவடியாக" (நற்றிணை கடவுள் வாழ்த்து) இவற்றில் உலகம் எனும் பொருள்களை உடைய நிலமடந்தை) நிலம், என்ற சொற்கள் அடையடுத்து வந்துள்ளன.

ஞாயிறு புகழப்படுதலும் வணங்கப்படுதலும் "முந்நீர் மீ மிசைப் பலர் தொழத் தோன்றிய ஏமுற விளங்கிய சுடர்" (நற்றிணை ; 283) "தயங்கு திரைப் பெருங்கடல் உலகு தொழத் தோன்றி வயங்கு கதிர் விரிந்த உருவு கெழு மண்டிலம்" (அக நானூறு 263) "ஞாயிறு போற்றுதும்; ஞாயிறு போற்றுதும்" (சிலம்பு : 1 : 4) என்ற வரிகளாலும் உறுதி செய்யப்படும்.

# 9. அனைய கொல்!

அறம் பொருள் இன்பம் என்ற மூன்றன் இயல்பினை உள்ளவாறு உணர்ந்து அவற்றிற்குரிய மதிப்பளிக்கும் உள்ளம் உடைய ஓர் உயர்குலப் பெண், கார் காலத்து மாலைப் பொழுதில் தலைவாயிற்கண் யாருடைய வருகை யையோ ஆவலோடு எதிர் நோக்கிக் கால் கடுக்க நின்று கொண்டிருந்தாள்.

அவள் கணவன் பெருவணிகர் குடியில் வந்தவன்; அதனால் விழுநிதி ஈட்டும் விருப்பம், அவன் உள்ளத்தில் இயல்பாக ஊறிக் கிடந்தது என்றாலும், அவன், அப்பொரு ளொன்றே வாழ்வுத் துணையாகும், அது ஒன்றைப் பெறுவ தினாலேயே தன் வாழ்வு நிறைவாகி விடும் எனக் கருதும் குறுகிய உள்ளம் உடையவனல்லன். பொருளீட்ட வேண்டும் என்றாலும், அதை அறவழியிலேயே ஈட்ட வேண்டும் என்றாலும், ஈட்டிய பின்னர் அப்பொருட் பயனாம் இன்பத்தைக் குறைவற நுகர்தல் வேண்டும் என்ற விரிந்த உள்ளமும் அவனுக்கு உண்டு. அவன் பால் அப்பண்பு குறைவறக் குடி கொண்டிருப்பதைக் கண்டே அவள் அவனை மணம் செய்து கொண்டாள். இருவரும் இணை பிரியாதிருந்து இன்புற்று வாழ்ந்தனர்,

ஒருநாள் 'எப்போதும் இன்ப நாட்டத்திலேயே இருந்து விடுதல் கூடாது. அவ்வின்பம் இடையற்றுப் போகா வண்ணம் துணை புரிவதாய பொருளையும் ஈட்ட

வேண்டும்' என்ற உணர்வு அவனுக்கு உண்டாயிற்று. உடனே அப்பணி மேற்கொண்டு புறப்படத் தொடங்கினான். அதை அவள் அறிந்து கொண்டாள். பொருளீட்ட வேண்டுவது அவன் கடமையென்பதை அவளும் அறிந்திருந்தமையால் அவன் விருப்பத்திற்கு மறுப்பளிக்கவில்லை.

ஆனால் பொருள் தேடிப் போகும் இவர், ஆங்கு எவ்வளவு காலம் இருக்க வேண்டி வருமோ; அவ்வளவு காலம் இவரைக் காணாது நான் எவ்வாறு தனித்து வாழ்வேன் என எண்ணி வருந்தினாள். அவ்வருத்தம் நிறை மனத்தோடு தன் மனைப்புறத்தே உள்ள நொச்சிவேலி அருகே நின்றிருந்தாள். அவளைத் தேடி ஆங்கு வந்த அவன் அவள் முகக்குறிப்பில் அவள் மனக் கலக்கத்தைக் கண்டு கொண்டாள். உடனே அவள் அருகில் சென்று நின்றான். வேலியில் படர்ந்திருக்கும் முல்லைக் கொடியை அவளுக்குக் காட்டி

'பெண்ணே! இம்முல்லை இப்போதுதான் தளிரீன்றுளது இது அரும்பீன்று மலரும் அத்துணை விரைவில் நான் வந்து விடுவேன். கார்காலம் தொடங்கியதும் இதுவும் மலரத் தொடங்கி விடும். நானும் அக்கார்காலத்தில் திரும்பி விடுவேன். இது உறுதி. அச்சிறு காலம் வரை; கடமையையெண்ணி கலங்காது காத்திருப்பாயாக'' எனக் கூறித்தேற்றினான். அவன் உரைத்த உறுதிமொழியை நம்பி, அவள் ஒருவாறு உளம் தேறி, அவனுக்கு விடையளித்தாள்.

அவன் போய் விட்டான். கடமையை எண்ணி அவள் காத்துக் கிடந்தாள். நாட்கள் கழிந்து கொண்டேயிருந்தன. கார்காலமும் தொடங்கி விட்டது. ஆயினும் அவன் வந்திலன். ஒவ்வொரு நாளிலும் அவனை எதிர் நோக்குவாள் அவன் வருகையைக் காண வாயிற்கண் வந்து, ஊரெல்லாம் உறங்கும் வரை காத்துக் கிடப்பாள்.

இறுதியில் அன்றும் அவன் வாராமை கண்டு வருந்தி வாயில் அடைத்து விழி நீர் சோரச் சென்று பள்ளி யில் வீழ்ந்து கிடப்பாள். அத்தகைய நாட்களுள் ஒன்று அந் நாள்.

கணவன் தேரைக் காணும் ஆர்வத்தோடு கண்ணில் நீர் மல்கக் காத்திருக்கும் போது அவள் தோழி ஆங்கு வந்தாள். அவளைக் கண்டதும் அவள் துயர் அளவிறந்து பெருகிற்று. உடனே, 'தோழி! கணவர் கார்காலத் தொடக்கத்தில் வந்து விடுவேன் என வாக்களித்துச் சென்றார். தோழி! அதோ பார், கார் கால மழை பெய்ந்து ஓய்ந்து விட்டது. தன் வருகைக்காகத் தவம் கிடந்த இம் மாநிலத்து மண் தண் பெயலால் நெகிழ்ந்து குளிறுமாறு பெருமழை பெய்த மேகம், தன் இடியொலி அடங்கி ஓய்ந்து விட்டது. மேகத்தை எதிர் நோக்கிற்று மண். அது ஏமாந்து போகாவாறு மழையும் உரிய காலத்தில் வந்து பெய்தது. அதனால் மண் குளிர்ந்தது. கணவர் வருகையை எதிர்நோக்கி நாள்தோறும் காத்துக் கிடக்கிறேன் நான். ஆனால் அவர் வந்திலர். வந்து தண்ணளி செய்திலர் அதனால் நான், மகிழ்ச்சியும் மன எழுச்சியும் இழந்து வருந்துகிறேன், காலம் பொய்யாது வந்து பெய்த மழை, இன்ன காலத்தில் வருகிறேன் என முன்கூட்டி வாக்களிக்கவில்லை. வாக்களிக் காமலே வந்து உதவிற்று. நம் கணவர் கார்காலத்தில் வந்து விடுவேன் என வாக்களித்துள்ளார். வாக்களித்தும் அக் காலத்தில் வந்திலர்.

"தோழி! சிற்சில ஆண்டுகளில் மழை கார்காலத்திற்கு முன்பாகவே வந்து நம்மை ஏமாற்றுவதும் உண்டு. ஆதலின் கார்காலம் தொடங்கி விட்டது என்பதை இம்மழையைக் கொண்டு மட்டும் நான் கூறவில்லை."

இதோ பார் காட்டில் எழுந்த நறுமணம் நாட்டிலும் வந்து நாறுகிறது. காட்டில் முல்லையும் பிடவும் மலர்ந்த

தால் எழுந்த மணம் கம்மென வீசத் தொடங்கி விட்டது. அது போதாதோ, கார்காலம் தொடங்கி விட்டது என்பதைக் காட்ட. தோழி! மலர்வதற்கு முன் சிவல் பறவையின் முள் போல் கூர்மையுற்றுக் காண்பதற்குக் கொடியவாய்க் காட்சி அளித்த முல்லை அரும்புகள், மலர்ந்த பின்னர் எத்துணை இனிமையாக மணக்கிறது கண்டாயா?

நம்பால் மனம் நெகிழ்ந்து, காலம் தாழ்க்காது வந்திருந்தால் நம் மனம் விரும்பு இனியவராக விளங்க வேண்டிய நம் கணவர் மனவிரக்கமற்று வராதிருப்பதால் நனிமிகக் கொடியவர் போல் தோன்றுகின்றனரே.

என்னே கொடுமை! தோழி! முல்லை தனித்து மலர்ந்திருந்தால் மணம் காடு நிறையப் பரவியிராது பிடவும் உடன் மலர்ந்ததினாலேயே இவ்வளவு மணம் எழுந்துளது. பொருளீட்டும் தன் பணியில் வெற்றி காண்பதால் அவர் மனம் மட்டும் நிறைந்து விடுவதால் வாழ்க்கையில் உண்மை இன்பம் உண்டாகி விடாது. வாக்களித்துச் சென்றவாறே கணவர் வந்து சேர்ந்தார் என்ற செய்தி கேட்டு என் மனமும் நிறைவு பெறுதல் வேண்டும். எங்கள் இருவர் நெஞ்சும் நிறைந்த வழியே எங்கள் வாழ்க்கையில் உண்மைப் பேரின்பம் நிலவும். இதை அவர் உணர்ந்திலர்; இப்போதும் அவர் வந்திலர். இதற்கு யான் என் செய்வேன்?

"தோழி! கார்காலம் தொடங்கியது மட்டுமன்று இப்போது கார்கழி காலமும் ஆகிவிட்டது. பள்ளங்களில் வெண் சங்குகள் உடைந்து கிடப்பனபோல் மலர்ந்துள்ள வெண்காந்தட் செடிகளுக்கு இடையிடையே தலைகாட்டும் அறுகம்புல்லை அதோ பார். கார்காலம் தொடக்கத்தில் முளைக்கத் தொடங்கிய அவ்வறுகு, இப்போது கிழங்கு விடுமளவு வளர்ந்துவிட்டது. அது கார்காலக் கழிவையல்லவோ உணர்த்தும்.

இன்னமும் அவர் வந்திலர். காதற்பிணையை அடையப் பெற்றேம் என்று களிப்பு மிகுதியால் செருக்கித் திரியும் அக் கலைமான் வெண்காந்தளும் அறுகங்கிழங்குமாகிய அரிய உணவையும் வெறுத்து, தன் காதற்பிணையின் பின் திரியும் அப்பேரின்பக்-காட்சியை, தோழி! நீயும் காண். இக்காதற் காட்சியைக் கண்டும் என் கண்கள் கலங்காதிருக்குமோ? இக் கலைக்கு உள்ள உணர்வுதானும் நம் காதலர்க்கு இல்லையே; புயிரையும் பாலையும் வெறுத்துவிட்டு இரலை, பிணைபின் திரிகிறது ஈண்டு.

ஆனால், நம் காதலர், பொருள்மீது சென்ற வேட்கையை வெறுத்து, நம்மோடு கூடிக் களிக்கக் கருதாது, நம்மை மறந்து, பொருளை விரும்பி ஆண்டே கிடக்கிறார். இதற்கு என் செய்வேன்?

"தோழி! மழை பெய்தது. அதைக் கண்ணுற்ற நான் மழைதான் பெய்தது. ஆனால் முல்லை இன்னமும் அரும்பீன் வில்லை. அது அரும்பீனும் காலத்தில் அவர் வந்து விடுவார்; அவர் அளித்த வாக்கு பொய்யாகாது என நம்பி அமைதி கண்டேன். அது கழிந்தது. முல்லையும் மலர்ந்து விட்டது. அப்போதும் அவர் வந்திலர். அவர் வாக்குப் பொய்த்து விடுமோ? அதனால் அறம் பிறழ்ந்த தவறு அவரைச் சார்ந்து விடுமோ என்ற ஐயம் எழுந்தது. அதனால் வருந்தினேன்.

அக்காலமும் கடந்துவிட்டது. கார்கழிகாலம் வந்து விட்டதை அறுகங்கிழங்கு உணர்த்தக் கண்டேன். இந்நிலையிலும் அவர் வந்திலர். அவர் உரைத்துச் சென்ற வாக்கு உறுதியாகப் பொய்த்து விட்டது. அதனால் அவர்க்கு என்ன கேடு நேருமோ என எண்ணி நடுங்குகிறது என் உள்ளம். தோழி! பொருள், அறத்திற்கும் இன்பத்திற்கும் துணையாய் விளங்க வேண்டும்.

இன்பத்தை அளிக்க வேண்டும்; அறவழி வரவேண்டும் என்றெல்லாம் அறநூல்கள் கூறுகின்றன. ஆனால் இவரோ தன் பொருள் வேட்கையால் என் இன்பத்தை அழித்து விட்டார். அளித்த லாக்குப் பிழைத்துப் போக அறநெறி யினின்றும் பிறழ்ந்து விட்டார். அறம் கெடினும் கெடுக இன்பம் கெடினும் கெடுக என்ற கருத்துடையவராய் நின்று அவர் பொருளீட்டத் துணிந்து விட்டார். தோழி! அப் பொருள் அத்துணைச் சிறப்புடையதோ?'' எனக் கூறி வருந்தினாள்.

''மண்கண் குளிர்ப்பவீசி, தண்பெயல்
பாடு உலந்தன்றே புறைக்குரல் எழிலி;
புதன் மிசைத் தளவின் இதழுள் செந்நனை
நெருங்கு குலைப் பிடவமொடு ஒருங்கு பிணி அவிழக்
காடே கம்மென்றன்றே; அவல
கோடு உடைந்தன்ன கோடல் பைம்பயிர்ப்
பதவின பாவை முனை இ மதவு நடை
அண்ணல் இரலை அமர் பிணை தழீஇத்
தண்அறல் பருகித் தாழ்ந்து பட்டனவே:
அனைய கொல்? வாழி தோழி! மனைய
தாழ்வில் நொச்சி சூழ்வன மலரும்
மௌவல் மாச்சினை காட்டி
அவ்வளவு என்றார் ஆண்டுச் செய்பொருளே.''

திணை ; பாலை

துறை : தலைமகன் பொருள்வயின் பிரிந்தானாகத் தலைவி தோழிக்குச் சொல்லியது.

புலவர் : ஒரோடோகத்துக் கந்தரத்தனார்.

1. மண்கண்—மண்ணிடம்

2 பாடு—ஒலி; உலந்தன்று—அடங்கிற்று; பறைக்குரல்-முரசுபோல் முழங்கும், எழிலி—மேகம்.

3. தளவு—முல்லை; செந்நனை—பேரரும்பு

4. பிணி அவிழ—மலர

5. அவல—பள்ளத்தில்

6. கோடு—சங்கு; கோடல்—வெண்காந்தள்;

7. பதவு—அறுகு; பாவை—கிழங்கு முளைஇ வெறுத்து; மதவு—செருக்கு மிகுந்த

8. இரலை—ஆண்மான்; அமர்: உள்ளம் விரும்பும்;

9. அறல்: நீர்; பஎ்டன: தங்கின

10 மனைய: மனைக் கண் உள்ள;

11. தாழ்வில்—உயர்ந்த, சூழ்வன—சூழ்ந்து.

# 10. இனத்து இயல்பாகும் அறிவு

நிலம் பெயராப் பொருள்களாம் மரம், செடி, கொடிகளும், நீர்வாழ்வனவும், பறப்பனவும், நிலத்தில் ஊர்வனவும் நடப்பனவும் ஆகிய அனைத்தும், உயிர் உடைய பொருள்கள் என்ற ஒருமைப்பாட்டால் ஓர் இனம் எனக் கருதப்படினும், அவ்வுயிரினம் அனைத்திலும் மனித இனம் உயர்வுடையது எனக் கருதப்படுவதற்குக் காரணமாய் நிற்பது மனித இனம் பெற்றிருக்கும் பகுத்துணர் அறிவே ஆகும்.

தக்கனவும், தகாதனவும், ஏற்பனவும் மறுப்பனவும் கலந்தே காட்சி அளிக்கும் உலகில், தக்கன இன்ன தகாதன இன்ன, ஏற்பன இன்ன மறுப்பன இன்ன எனத் தெளிவாக உணர்ந்து தக்கனவும் ஏற்பனவும் கொண்டு, தகாதனவும் மறுப்பனவும் கைவிடத் துணைபுரியும் அறிவினைப் பெற்றிருப்பதினாலேயே, மனித இனம் ஏனைய உயிரினத்திலும் சிறந்து விளங்குகிறது. ஆகவே, மனித இனத்திற்குச் சிறப்பளித்து நிற்கும் அவ்வறிவு மாசுபடாப் பெருமையுடையதாக இருக்கவேண்டும் என்பது இன்றியமையாதது. மனித இனத்திற்கு மாண்புதரும் அவ்வறிவு, அம்மனித உணர்வு, தான் விரும்பும் பொருள் மீதெல்லாம் சென்று அலைந்து கெட்டொழியாவாறு அணைபோட்டுத் தடுத்து, நல்லனவற்றின் மீது மட்டுமே நாட்டம் கொள்ளத் துணை நிற்றல் வேண்டும். அந்நிலையில்தான் அது அறிவு எனப்படும்; அதுதான் அதற்கு அழகும் இயல்பும். "சென்ற இடத்தால் செலவிடாது தீது ஒரீஇ, நன்றின்பால் உய்ப்பது அறிவு" என வள்ளுவர் வகுக்கும் அறிவின் இலக்கணம் காண்க.

அறிவின் அந்த இயல்பு, அதற்கு இயல்பாகவே வந்து வாய்ந்துவிடாது. அது அந்த அறிவினைத் தாங்கி நிற்கும் மனிதன் சார்ந்து நிற்கும் சூழ்நிலையினாலேயே உருவாகும்.

மனித இனம், தனித் தனியாக இருந்து வாழ இயலாது. மனித இனத்தின் தேவைகளும், அது வாழும் உலகச் சூழ்நிலையும் கலந்துறை வாழ்விற்கே வழிகோலியுள்ளன. அவ்வாறு கலந்து வாழும் மனிதர்கள் எல்லோரும் ஒத்த இயல்புடையவராகிவிடார். எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும் என்றாலும், அவரவர் செய்யும் தொழில்களின் வேறுபாட்டால் அவரவர்பால் அமைந்து கிடக்கும் சிறப்புகள் வேறுபடுவதற்கு ஏற்ப, அவரவர் குணநலனும் வேறுபட்டே தீரும். ஆகவே, இவ்வியல்பால் நல்லவர்களையும், தீயவர்களையும் ஒருசேரக்கொண்டிருக்கும் உலகம்.

நல்லனவும், தீயனவும் தேர்ந்து உணர்வதே அறிவுக்கு இலக்கணமாம் என்றாலும், அவ்விலக்கணம் அதற்கு இயல்பாகவே உண்டாகிவிடாது. அது, அவ்வுணர்வைத் தன்னளவிலேயே பெற்றிருப்பதில்லை. அது, மக்கள் இனத்தோடு கலந்து பழகும் நிலையிலேயே அவ்வுணர்வைப் பெறுகிறது. அறிவு சார்ந்த தன் வண்ணம் ஆகிவிடும் இயல்புடையது. மனித இனம், தன்னைச் சார்ந்து நிற்பார் அறிவைத் தன்வயம் ஆக்கும் பேராற்றல் வாய்ந்தது. ஓரினத்தோடு—அது நல்லவர் இனமாயினும் சரி, தீயோர் இனமாயினும் சரி—அதனுடன் கலந்துவிட்ட பின்னர், கலந்துவிட்டவரின் அறிவு, அவ்வினத்தாரின் அறிவின் இயல்பினை ஏற்றுக் கொள்ளாது, தன் பண்டைய தனித் தன்மையை நிலைநாட்டி நிற்க இயலாது. கலந்தது நல்லோர் அவை ஆயின், அவ்வறிவு நல்லறிவாம். கலந்தது தீயோர் கூட்டமாயின் அவ்வறிவும் தீதாம்.

பெய்யும் மழை நீர்க்கு, அது மண்ணை அடையும் வரை சுவையும் கிடையாது, நிறமும் கிடையாது. அது மண்ணைத்

தொட்டவுடனே அதற்குச் சுவையும் கூடிவிடுகிறது; நிறமும் கலந்துவிடுகிறது. அவ்வாறு கூடும் சுவையும், கலக்கும் நிறமும் ஒரே இயல்புடையவை அல்ல. மழைநீர் தொட்ட மண்ணின் இயல்புக்கு ஏற்ப, வேறு வேறு சுவையும் வேறு வேறு நிறமும் வாய்த்துவிடுகின்றன. மழைநீர் தொட்ட மண் செம்மண்ணாயின், நீர், செந்நீராகிறது; கருநிறமாயின் நீர் கருநீர் ஆகிறது; மழை தொட்ட மண் உவர்நிலமாயின், மழைநீர், ஒன்றிற்கும் உதவா உவர் நீராகிறது; ஆற்றுப் படுகையாயின், உண்ணத் தெவிட்டாச் சுவைநீர் ஆகிறது. இவ்வாறு சார்ந்த நிலத்தின் நிறம் சுவைகளைத்தான் ஏற்றுக் கொள்கிறதே ஒழிய, அந்நிலத்தின் நிறம் சுவைகளை மாற்றிவிடும் இயல்பு மழை நீருக்கு இல்லை.

இவ்வாறு, மழைநீர் தன்னளவில் நிறமும், சுவையும், பெறாது நிற்பினும், சார்ந்த நிலத்தில் சுவைகளுக்கு ஏற்ப மாறிவிடுவது போலவே, அறிவும், நன்மை தீமைகளை, அது தொடக்கத்தில் பெற்றிருக்கவில்லை எனினும், அது சார்ந்து நிற்கும் இனத்தின் ஈர்ப்பாற்றலுக்கு ஏற்ப நன்மை தீமைகளை ஏற்றுத் திரிந்துவிடும்.

தன்னோடு கலந்துவிட்டார் அறிவைத் தன்வயம் ஆக்கிவிடும் ஆற்றல் இனத்திற்கு இருப்பதாலும், அந்நிலையி லிருந்து மாறி எந்த இனத்தோடு சேர்ந்தாலும் தன் தனித் தன்மையை இழந்துவிடாது பெற்று நிற்கவல்ல ஆற்றலோ, தான்சார்ந்து நிற்கும் இனத்தின் இயல்பைக் கெடுத்துத் தன்வயம் ஆக்கும் ஆற்றலோ, அறிவுக்கு இல்லாததாலும், சார்ந்து நிற்கவேண்டிய இனத்தினைத் தேர்ந்துகொள்வதில் மனிதன் விழிப்பாயிருக்க வேண்டும்.

இது உவர்நிலம் ஆகவே ஈண்டுப் பெய்யக்கூடாது இது நன்னிலம் ஆகவே ஈண்டுப் பெய்யலாம் என உணர்ந்து பெய்யும் அறிவு நிலையைப் பெற்றது அன்று மழை;

அதனால்இடம் நோக்கிப் பெய்யாது, எங்கும் பெய்து, இரு நிலைகளையும் பெற்றுவிடும் மழை நீரைக் குறைகூற இயலாது; ஆனால், அறிவு அத்தகையதன்று; நல்லன தீயன உணரும் ஆற்றல் வாய்ந்தது. அதனால், அது, நல்லோர் தீயோர்களை இனங்கண்டு உறவு கொள்ளுதல் வேண்டும். தீயோர் இனத்தினைக் குறுகாது நல்லார் இனத்தை நாடி அடையும் அறிவே நல்லறிவாம். இவ்வளவு அருமையான கருத்துக்களையும்—

> "நிலத்து இயல்பால் நீர் திரிந்தற்று ஆகும்; மாந்தர்க்கு
> இனத்து இயல்பதாகும் அறிவு."

என்ற குறள் வெண்பாவால் உணர்த்தியுள்ளார் வள்ளுவப் பெருந்தகையார்.

# 11. மனமும் இனமும்

செயல், புறத்தே நிகழ்வது; உணர்வு அகத்தே எழுவது. செயல் புலப்படக்கூடியது; உணர்வு புலப்பட மாட்டாதது. புறத்தே நிகழும் செயல் அகத்தே எழும் உணர்வை அடிப் படையாகக் கொண்டிருத்தல் வேண்டும். அதுவே இயற் கையுமாகும். உணர்வு ஊற்றெடுக்கும் அகமும், அவ்வுணர்வை வெளிப்படுத்தும் நாவும், அதன் வழிச் செயல் படும் மெய்யும் ஒன்றிற்கொன்று தொடர்புடையவாகும். இம்மூன்று நிலையாலும், மனிதர் தூய்மையுடையராதல் வேண்டும். இதை வலியுறுத்தவே, உண்மை, வாய்மை, மெய்ம்மை என ஒரே பொருள் குறிக்க, மூன்று சொற்களைப் பெற்றுளது தமிழ் மொழி. உள்ளத்தில் ஊற்றெடுக்கும் உணர்வுத் தூய்மையை உணர்த்துவது உண்மை. வாயடி யாக எழும் சொல்லின் தூய்மையை உணர்த்துவது வாய்மை. மெய் அடியாக எழும் செயல் தூய்மையை உணர்த்துவது மெய்ம்மை.

சொல்லும் செயலும், உணர்வை அடிப்படையாகக் கொண்டே எழும். உணர்வின்றிச் சொல் எழாது. உணர் வின்றிச் செயல் நிகழாது. உணர்வு உண்டாகிவிடின், அது தொடர்பாகச் சொல் எழுவதையோ, செயல் நிகழ்வதையோ தடுத்து நிறுத்த இயலாது. அவை தாமாகவே எழும்; நிகழும். ஆகவேதான் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆகிய செயல் பற்றியதே அறம் ஆயினும், அவற்றிற்கு அடிப் படை அறவுணர்வே என்பதால், "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறம்" என அறத்தை மனத்தின் தொழிலாகக் கூறினார் வள்ளுவர். தாம் கூற விரும்பியன வற்றை வள்ளுவர் குறளினும் சுருங்கிய வாய்பாட்டால்

கூறுவதையே வழக்கமாகக் கொண்ட ஔவையயார், "அறம் செய்" என்பதே சுருங்கிய வாய்பாடாகவும், அது கொள்ளாது. அறவழி வாழ எண்ணிவிட்டால் அறவழி வாழ்ந்து விடுவர் என்ற துணிவினால் "அறஞ் செய விரும்பு" என மேலும் ஒரு சொல் விரிந்த தொடரை மேற் கொண்டுள்ளார்.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்" என்ற வள்ளுவர் வாய் மொழியும், "மனம் இருந்தால் மார்க்கம் உண்டு" என்ற மக்கள் வாய்மொழியும் காண்க.

மனிதனை மதிப்பிடத் துணைபுரிவன, அவன் செய்யும் செயலும், உரைக்கும் சொல்லுமே ஆம். "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்" என்பது திருக்குறள். "மனத்தது மாசாக மாண்டாரின் நீராடி மறைந்தொழுகு மாந்தர் பலர்" என்பதற்கேற்ப உணர்வு ஒன்றாக, சொல்லும் செயலும் அவ்வுணர்வுக்கு மாறுபட்டனவாக வாழும் வன்கணாளரும் உலகில் உலவு கின்றனர் என்பது உண்மையே என்றாலும், வேடமிட்டு நடிக்கும் அந்நாடகம் விரைவில் கலைந்து போகும் ஆதலின், ஒருவன் நல்லவன், நல்லவனல்லன் என்பதை அவனாற்றும் செயல் கொண்டே உலகம் மதிப்பிடும். அச்செயல், அவன் உணர்வையே அடிப்படையாகக் கொண்டு நிகழும் ஆதலின், மனிதன் அவன் உள்ளத்து உணர்வுக்கு ஏற்பவே மதிப்பிடப் படுகிறான் என்பதே உண்மை.

அந்த உணர்வு அவன் மனத்தே எழுவது; நல்லுணர்வோ தீயவுணர்வோ, மனம் எண்ணிய வழி எழுந்துவிடும்; நல்லுணர்வுடைய மனம், விரும்பிவிட்டால் அந் நல்லுணர்வைக் கைவிட்டுத் தீயவுணர்வைக் கக்கலாம். அது போலவே, தீயவுணர்வு உடையதாக இருந்த மனம், நினைத்த அக்கணமே அத்தீயவுணர்வைக் கைவிட்டு

நல்லுணர்வை வெளிப்படுத்தலாம். ஆக, அது, அவன் அகத்தே அடங்கிக் கிடக்கும் மனத்தின் நிலைக்கேற்ப உண்டாகிவிடும். ஆகவே, அவ்விரு நிலையும் அவ்விடத்திலேயே அடங்கி இருப்பன ஆகும்.

ஆனால், மக்களினத்தோடு கொள்ளும் தொடர்பால் உண்டாகும் விளைவு அத்தகையதன்று; ஒருவன் உணர்வாலும், உரையாலும், உடல் ஆற்றும் செயலாலும் எவ்வளவுதான் தூய்மையுடையவனாக இருந்தாலும், அத்தூய்மை அவன் சார்ந்து நிற்கும் இனத்தாரின் இயல்புக்கு ஏற்ப வேறுபட்டே தீரும். சார்ந்து நிற்பது நல்லினமாயின், அத்தூய்மை மேலும் வலுப்பெற்றுத் திகழும். சிற்றினத்தோடு சேர்ந்துவிடுவனாயின், அத்தூய்மை மெல்ல மெல்ல வலிவிழந்து, இறுதியில் அறவே அழிந்துபோக, தூய்மைக்கு மாறான நிலையே அவன்பால் குடி புகுந்துவிடும். சிற்றினத்தோடு சேர்ந்த பின்னரும் தூய்மையாக இருக்க இயலாது. இருக்க முயலலாம்; ஒரு சில காலம் இருக்கவும் செய்யலாம். தூய்மை கெடாமல் வாழும் அவ்வொரு சில கால வாழ்வையும், உலகம் ஐயப்பட்டே தீரும்.

பனையடியில் அமர்ந்து பாலே பருகினாலும், உண்ணுவது பால் என ஏற்றுக் கொள்ளாது உலகம். மேலும், பனை அடியையே வாழ்விடமாகக் கொண்டு விட்டானால், நீண்ட நாளைக்குப் பாலையே உண்ணவும் இயலாது. பால், பனங்கள்ளாக மாற நெடுங்காலம் ஆகாது. காலம் சிறிது ஆகும் ஆயினும் பால், பனங்கள்ளாக மாறியே தீரும். ஆகவே, ஒருவன் உள்ளத்தால் எவ்வளவுதான் தூய்மையுடையவனாக இருப்பினும், அத்தூய்மை கெடாது நிற்க, அவ்வுணர்வுத் தூய்மை மட்டும் போதாது. அவன் சார்ந்து நிற்கும் இனமும் தூய்மையுடையதாதல் வேண்டும்.

ஆகவே ஒருவன் நல்லவன். நல்லவன் அல்லன் என்பது அவன் சார்ந்து நிற்கும் இனத்தின் இயல்புக்கு ஏற்பவே மதிப்பிடப்படும். "உன் நண்பனை அடையாளம் காட்டு; நீ எத்தகையவன் என்பதைக் கூறுகிறேன்" என்ற பெரியார் வாக்கும் இதையே வலியுறுத்துவது காண்க. சார்ந்து நிற்கும் இனம் நல்லினமாயின், அவனும் நல்லவனாவன். அது சிற்றினமாயின் அவனும் தீயோனாவன்.

ஓர் உணர்வை இழந்தால் அதை மீண்டும் பெற்றுக் கொள்ள இயலும், அது அவன் மனத்தகத்தே இருப்பதால். ஆனால், ஓர் இனத்தோடு சேர்ந்து, அவர் இயல்புகளுக்கு அடிமையாகி விட்டவனால், அவ்வியல்பிலிருந்து விடுபட இயலாது. ஆகவே இனத்தைத் தேர்ந்து கொள்வதில் விழிப்பாய் இருத்தல் வேண்டும்.

> "மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி; இனத்தானாம்
> இன்னான் எனப்படும் சொல்."

என்ற குறளில், இத்துணைப் பொருளும் அடங்கி இருப்பது அறிக.

# 12. அரிதாகும் அவன் மார்பு!

வேட்டுவக்குடியில் வந்த ஓர் இளைஞன் ஒருநாள் வழக்கம்போல் வேட்டைமேற் சென்றான். வேட்டைக்குத் துணைபுரியும் அவனுடைய வளர்ப்பு நாய் அவனைப் பின் தொடர்ந்து விரைந்து வந்து கொண்டிருந்தது. அன்று, அவன் தன்னை அழகிய மலர்களால் ஆன மாலையால் அணி செய்து கொண்டிருந்தான். நிறத்தைப் போலவே நாற்றத்தாலும் பற்பல வகை மலர்களைக் கொண்ட அம்மாலையின் மணம் செல்லும் வழியெங்கும் சென்று நெடுநேரம் கழிந்த பின்னரும் நாறிக் கொண்டிருந்தது.

இவ்வாறு அணி செய்து கொண்டு, நாயோடும் வில் அம்புகளோடும் புறப்பட்ட அவன், வேட்டையாடிக் கொண்டே பலமலைக் கடந்து வந்து விட்டான். இறுதியில் ஒரு மலைச்சாரலை அடைந்தான். ஆங்கு அழகிய குரல் ஒலி கேட்டு, அவ்வொலி வந்த இடத்திற்குச் சென்றான். ஆங்கு அவன் காட்சி, அறிவு மயங்கும் பெருமகிழ்ச்சி அளித்தது.

அது ஒரு திணைப்புலம்; புனத்தின் நடுவே உயர்ந்த பரண் ஒன்று அமைந்திருந்தது. உலகத்து அழகெல்லாம் ஒன்று திரண்டு ஒருருவானாற்போலும் உருவு நலம் வாய்க்கப் பெற்ற நங்கையொருத்தி, அப்பரண் மீது நின்ற வாறே, கவண்முதலாம் கருவிகளின் துணையால் கிளி யோட்டிக் கொண்டிருந்தாள். அவள் அழகையும் கிளி

யோட்டும் அவள் தொழில் அறிவையும், அவள் குரல் இனிமையையும் கண்ணெதிர் கண்ட இளைஞன். அவள் பால் காதல் கொண்டான். நாற்புறமும் திரும்பித் திரும்பிக் கிளியோட்டிக் கொண்டிருந்த அவள், இளைஞன் நின்றிருந்த பக்கத்தில் படிந்திருக்கும் கிளிகளை ஓட்ட அப்பக்கம் திரும்பினபோது, ஆங்கு அவன் நிற்பதைக் கண்டாள். இளமை நலம் விளங்கும் அவன் திருமேனி, அவன் மார்பில் கிடந்து மணம் நாறும் மாலை, கையில் ஏந்திய வில்லும் அம்பும் அவன் காலடியில் நிற்கும் நாயின் குறுகுறுத்த நோக்கும் உணர்த்தும் அவன் வீரம் ஆகிய அனைத்தும், அவ்வாறே அவள் உள்ளத்தில் குடி புகுந்து கொண்டன.

அவளும் அவன் நிலையினளாயினாள். இருவரும் உள்ளத்தால் ஒன்றுபட்டு விட்டனர்; அன்று முதல், இளைஞன் வேட்டைத் தொழிலை மறந்து ஆங்கு வருவதும், இவள் காத்தல் தொழிலைக் கைவிட்டு அவன் வருகையை எதிர்நோக்கிக் கிடப்பதும்அவன் வந்ததும் இருவரும் கூடி மலையருவியில் ஆடியும் மலர் பறித்துச் சூடியும் மகிழ்வதும் வழக்கமாகி விட்டது.

இந்நிலையில் நாட்கள் மெல்லச் சென்று கொண்டிருந்தன. இடையறா இன்பவெள்ளத்தில் மூழ்கியிருப்பவர் இடையிடையே ஓரிரு நாட்கள் துன்புறவும் நேர்ந்தது. இளைஞனுக்குரிய ஊர் பலமலைகளுக்கு அப்பால் இருந்தமையால் அவன் எவ்வளவு முயன்றும், எதிர்பாரா இடையூறுகளால் ஒருசில நாட்களில் வர இயலாது நின்று விடுவன். அந்நாட்களில் அவள் உள்ளம் ஆற்றொணாத்துயர் உறும்; கடமையிலும் கருத்துச் செல்லாது. இவ்வாறு அவன் வாராது போவது அடிக்கடி ஏற்படவே, அவள் உள்ளத்தில் புதுக்கவலை ஒன்றும் புகுந்து கொண்டது. அவனோ

மலைகள் பலவற்றைக் கடந்து வருகிறான். அவன் தொழிலோ வேட்டையாடுவது; வேட்டையில் எதிர்ப்படும் விலங்குகளில், அவன் ஆற்றலுக்கு மிஞ்சியனவும் சில இருக்கும்; அவற்றால் அவனுக்கு ஊறு நேர்தலும் உண்டாம் என்ற எண்ணம் எழ அலைபாய்ந்தது அவள் உள்ளம். அதனால் அவள் செயலிழந்து கிடந்து வருந்தத் தலைப் பட்டாள்.

தினைப்புனத்தில் தம்மை ஓட்டுவார் இல்லாமையால் கிளிகள் தம் விருப்பம் போல் தினைக்கதிர்களைக் கொய்து சென்றன. தினை கதிரீன்று விட்டது என்றாலும் அக்கதிர் கள் இன்னமும் முற்றவில்லை.

இன்னும் சில நாள் கழித்தே அவை கொய்யப் பெறுதல் வேண்டும். ஆனால் கிளிகள் அதற்குள்ளாகவே அவற்றைக் கொண்டு போகத் தலைப்பட்டன. அதனால் கதிர் கொண்ட தாளினும் கதிரியிழந்து போன தாள்களே மிகுதி யாகக் காட்சி அளித்தன. தினைப்புனத்தின் அவ்வழி நிலையை அப்பெண்ணின் தோழி கண்ணுற்றாள். புனத்தை இவ்வாறு பாழாகவிடுத்து அப்பெண் யாது செய்கிறாள் எனச் சென்று அவளைப் பார்த்தாள். ஆங்கு அவள் சித்தம் பிறழ்ந்தவள் போல் செயலிழந்து கிடப்பதைக் கண்டாள். அவளை அணுகி வினாவினாள்.

இளைஞனைக் கண்டது, அவன் பால் காதல் கொண்டது சின்னாட்களாக அவன் வாராமை, அதனால் தன் உள்ளம் படும்பாடு ஆகிய அனைத்தையும் அப்பெண் ஒன்று விடாது உரைத்தாள். அச்செய்தி கேட்டு தோழி நனிமிக நடுங்கி விட்டாள். ''இவளை ஈன்ற தாய் இவளைத் தன் உயிரினும் சிறந்தவளாக ஓம்புகிறாள்.

அவள் இவளை இந்நிலையில் கண்டால் என்னாவது? மகள் மணப்பருவம் அடைந்து விட்டாள்; ஆகவே மணமாகி

விட்டால் இவள் துயர் மறைந்து போம் என உணர்ந்து இவள் காதலைப்பற்றி ஏதும் அறியாமையால் தான் விரும்பும் ஓர் இளைஞனுக்கு இவளை மணஞ்செய்து கொடுத்து விட்டால், இவள் காதலும் கற்பும் என்னாம்?'' என எண்ணிக் கவலை கொண்டாள். உடனே, "இதற்கு ஒரு வழி காண வேண்டும்.

இவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அவ்விளை ஞனுக்குத் தாயின் இயல்பை எடுத்து உரைத்தல் வேண்டும்; அவளால் தன் காதலிக்குக் கேடு நேர்வதற்கு முன் அவன் இவளை வரைந்து கொள்ள வேண்டிய இன்றிய மையாயினை, அவன் உணரும் வகையில் எடுத்து இயம்ப வேண்டும்'' எனக் கருதினாள்.

அந்நிலையில் அவனும் அப்புனம் நோக்கி வந்து கொண்டிருந்தான். புனத்தை அடைந்தவன், பரண்மீது தன் காதலியோடு வேறு ஒரு பெண்ணும் அமர்ந்திருப்பதைக் கண்டு அப்பரணுக்கு அணித்தாக அவர் அறியாவாறு ஒளிந்து கொண்டான். அதைப் பார்த்து விட்டாள் தோழி. உடனே,

'பெண்ணே! புனம் அழிந்து போகிறது. அதை பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாது, காத லனைக் காண வேண்டும்; அவன் இன்னமும் வந்திலன்; வேட்டையாடிக் கொண்டே பல மலைகளைத் தாண்டிவரும் அவனுக்கு வழியில் வேட்டை விலங்குகளால் யாதேனும் இடையூறு நேர்ந்திருக்குமோ என்ற எண்ணம் அலைக்க, இங்கே கிடந்து வருந்துகிறாய்; நம் தாயின் இயல்பு உனக்கு நன்கு தெரியும்.

நாளை அவள் வந்து இப்புனத்தைப் பார்த்தால், உன் நினைவெல்லாம் நிலை குலைந்து விடும். புனத்தில் கிளிகள் வந்து அமரும் இடங்களுக்கெல்லாம் ஓடி ஓடி அவற்றை நீ

ஓட்டாமையால், புனத்தில் கதிர் இழந்த தாள்களே மிகுதியாக நிற்பதைக் காணும் தாய், கதிர்கள் முற்றாத இப்போதே இவ்வளவு கேடு; அவை முற்றிவிட்டால் புனம் முற்றிலும் பாழாகி விடும்; இப்போது வரும் சில பறவைகளையும் ஓட்டமாட்டாத இவள், அவை முற்றி விட்டால், பறவைகள் கூட்டங் கூட்டமாய் வந்து படியுமே, அப்போது என்ன செய்வாள்? புனத்தைக் காக்கும் திறம் இவளுக்கு இல்லை என எண்ணி காவலுக்கு வேறு சிலரை அமர்த்தி விட்டு உன்னை வீட்டிற்கு அனுப்பி விடுவாள்.

அந்நிலை உண்டாகி விட்டால், பின்னர் காதலனைக் காண்பதோ அவனையே உனக்கு உரியவனாக்கிக் கொள்வதோ இயலாதாகிவிடும்! ஆகவே புனங்காவல் உரிமை பிறர் கைக்குப் போகாது, அது உன் கையிலேயே நிற்குமாறு ஓரிரு முறையேனும் எழுந்து போய் கிளிகளை ஓட்டு'' எனக் கூறினாள்.

தோழி கூறிய அனைத்தையும் கேட்டான் இளைஞன்; நுண்ணிய அறிவுச் செல்வம் வாய்ந்தவன் அவன். அதனால், தோழி அவ்வாறு கூறியது, "ஏடா! எங்கள் தாய் தன் உடைமைகளிடத்தில் கருத்துடையவள். தன் உடைமை அழிந்துபோக அவள் பார்த்திராள்.

அதை அழியாதவாறு காப்பதற்கு வேண்டுவ அனைத்தையும் விரைந்து செய்து முடிப்பள்; புனங் காக்கும் பொறுப் பேற்றுக் கொண்டவள் தன் மகளே ஆயினும், அவளால் அப் புனத்தை அழியாது காப்பது இயலாது என்பதை அறிந்து கொள்வாளாயின் அறிந்துகொண்ட அப்போதே, அவள் தன் மகள் என்பதையும் பாராது அவளை அகற்றி விட்டுப் பிறரை அமர்த்துவள்.

தினை முற்று முன்பே இத்துணை விழிப்பாயிருப்பவள், அது முற்றிவிட்டதைக் கண்ட பின்னர் எத்துணை விழிப்பா

யிருப்பள் என்பதை நீயே எண்ணிப் பார்: தினைப்புனத் திற்கே, அவள் அவ்வளவு கருத்துடையளாயின், தான் பெற்ற தன் மகள்பால் அவள் எவ்வளவு கருத்துடையளாவள் என்பதை இயம்புவது ஒண்ணுமோ? காதல் அளிக்கும் மனக் கவலையால் நலனிழந்து கிடக்கும் இவளை இந்நிலையில் அவள் பார்த்து விட்டால் என்னாவது? அவள், தன் மகளை இன்னமும் பேதைப் பருவத்தினள் என்றே கருதியுள்ளாள்.

இவளை, அக் கருத்துடையஇப்போது காணினும்,அவள், இவள் துயர் தீர்த்தற்கு வேண்டும் அனைத்தையும், உடனே விரைந்து மேற்கொள்வள். அது தீர்க்க வல்லார் எனத்தான் அறிந்த எவர் துணையையும் வேண்டிப் பெறுவள்.

அத்தகையாள், மகள் பேதைப் பருவம் கடந்து விட்டாள்; பெதும்பைப் பருவத்தை அடைந்து விட்டாள்; அப்பருவத்தில் மகளிர்க்கு இயல்பாக உண்டாகும் மன நோயே இது என உணர்ந்து கொண்டால், உடனே, அம் மனநோய் நீக்க வல்லவன் எனத்தான் நினைக்கும் ஒருவ னுக்கு இவளை மணம் முடித்து வைத்து இவள் மனநோயைப் போக்கத் துணிவள்; துணிந்தவாறே முடித்தும் விடுவள். அந்நிலை உண்டாகி விட்டால், இவள், உன் மார்பையே தன் உடைமையாக அடைவதற்குப் பதிலாக யாரோ பிறன் ஒருவன் மார்பையே பெறவேண்டி நேரிடும்.

அதை இவளால் தாங்கிக் கொள்வது இயலாது; அந் நிலையே, இவள் தன் உயிரிழந்து போவள். ஆகவே அந் நிலை உண்டாகாவாறு, இவளைக் களவில் கண்டு மகிழ்வ தற்கு இடையிடையே, இவளை வரைந்து கொள்வதற்கு வேண்டிய முயற்சிகளையும் இப்போது விரைந்து மேற் கொள்வாயாக" எனத் தன்னை நோக்கிக் கூறாமல் கூறிய தாக உணர்ந்தான்; உடனே மணத்தில் சென்ற மனம் உடையனாய், தன் ஊர் நோக்கி விரைந்து சென்றான்.

"மெய்யில் தீரா மேவரு காமமொடு
எய்யாய் ஆயினும் உரைப்பல்: தோழி!
கொய்யா முன்னுறும் குரல் வார்பு தினையே
அருவி ஆன்ற பைங்கால் தோறும்
இருவி தோன்றின பலவே; நீயே
முருகு முரண் கொள்ளும் தேம்பாய் கண்ணிப்
பரியல் நாயொடு பன்மலைப் படரும்
வேட்டுவன் பெறலோடு அமைந்தனை; யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க எழுந்து எழுந்து
கிள்ளைத் தெள்விளி இடை இடை பயிற்றி
ஆங்காங்கு ஒழுகாயாயின், அன்னை
சிறுகிளி கடிதல் தேற்றாள் இவள் எனப்
பிறர்த் தந்து நிறுக்குவளாயின்
உறற்கு அரிதாகும் அவன் மலர்ந்த மார்பே"

திணை : குறிஞ்சி

துறை : தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழி தலைமகளுக்குச் சொல்லுவாளாய் வரைவு கடாயது.

புலவர் : அறிவுடைநம்பி.

1. மெய்யில் தீரா : உடலுறு புணர்ச்சி பெறாத: மேவரு—பெறுதற்கு அரிய;
2. எய்யாய் : அறியாய்;
3. வார்பு—முற்றி.
4. ஆன்ற : அற்றுப் போன; பைங்கால்—பசியதாள்.
5. இருவி—கதிர் இழந்த வெற்றுத்தாள்;
6. முருகு—மணம்; தேம்பாய்—தேன் சொட்டும்; கண்ணி—தலைமாலை;

7. பரியல்—விரைந்து பாயும்.

8. யாழ்—அசை.

9. தொடலை—மாலை; நுடங்கி—அசைய;

10. கிள்ளைத் தெள்விளி—ஆலோலம் என்பது போலும் கிளி ஓட்டும் ஓசை: பயிற்றி: பல கால் ஒலித்து,

12. சிறுகிளி—சிலவே வரும் கிளிகள்; கடிதல்—ஓட்டுதல்; தேற்றாள்—அறியாள்.

14. உறற்கு—அடைதற்கு,

# 13. வள்ளுவர் காட்டும் வழி

"தமிழனுக்கு உள்ள ஒரு சிறப்பு அவன் எங்கு சென்றாலும் தமிழ்க் கலாசாரத்தைப் பரப்புவது ஆகும். கடல் கடந்து சென்று தமிழன் பரப்பிய கலாசாரத்தின் சுவடுகள் இன்று உலக நாடுகள் பலவற்றில் காணப்படுகின்றன.

மது வருந்துவதும், மங்கையரோடு கூடி இன்பம் துய்ப்பதுமே வாழ்வு என்று இருந்த நாகர்களுக்கு பழந் தமிழன் ஒருவன் மதுவும் மங்கையும் பெற்று வாழ்வது வாழ்வாகாது என்று தமிழ்நாட்டு அறம் போதித்து அவர்களை நல்வழிக்குத் திருப்பிய செதியை மணிமேகலை கூறுகிறது.

தமிழன் அக வாழ்வில் அதிக கவனம் செலுத்தினான், புறவாழ்வைப் பற்றி அவன் கவனிக்கவில்லை.

வானுயர் மாடி வீடு கட்டி வாழ்வது, விரைவான வாகனங்களில் பிரயாணம் செய்வது, நவீன வசதிகள் பெற்று இருப்பது முதலானவற்றை இன்று நாகரீக வளர்ச்சிக்கான அறிகுறிகள் என்று பலரும் கருதுகிறார்கள்.

சந்திர மண்டலத்துக்குச் சென்று அங்கிருந்து மண் எடுத்து வருவது விஞ்ஞான வித்தைதான். அறிவியல் வளர்ச்சியை அது காட்டுமே தவிர நாகரீக மேம்பாட்டுக்கு அது எடுத்துக் காட்டு ஆகாது.

மேலை நாட்டு வளர்ச்சியெல்லாம் புறத் துறையிலேயே இருப்பதைக் காணலாம். சிகாகோ சென்று சர்வ சமய காங்கிரசிலே பேசிய சுவாமி விவேகானந்தரும் இதைத்தான் அங்கே சொன்னார். அகத்தை விட்டுப் புற வளர்ச்சியிலேயே மேற்கு நாடுகள் கரிசனை கொண்டுள்ளன என்று அவர் எடுத்துரைத்தார்.

தமிழன் அக வாழ்விலே சிறப்பு எய்துவதற்கு பழந் தமிழகம் அவனுக்கு வழி காட்டியிருக்கிறது.

யார் மனிதன்? எப்படி அவன் வாழ வேண்டும், என்றெல்லாம் 2000 ஆண்டுகளுக்கு முன்னரே வள்ளுவப் பெருந்தகை விளக்கியிருக்கிறார்.

"அரம் போலும் கூரியராயினும் மரம் போல்வர் மனிதப் பண்பிலார்" என்கிறார் வள்ளுவர். "மனித உறுப்புகள் இருக்கிற ஒரே காரணத்தாலோ, அல்லது சந்திர மண்டலத்துக்குப் போய் வரக்கூடிய அறிவு பெற்று விட்டதாலோ மனிதன் மனிதன் ஆகி விடமுடியாது. மனிதப் பண்பு இல்லாவிட்டால் அவன் மரத்துக்கு சமம் ஆவான்" என்பது வள்ளுவர் வாக்கு.

"எது மனிதப் பண்பு? தனக்கு என்று இல்லாமல் பிறருக்காக வாழத் துடிக்கும் பண்பே மனிதப் பண்பு. பிறருக்குத் துன்பம் வரும்போது அது தனக்கு வந்த துன்பமாகக் கருதி அதை நிவர்த்திக்க முயற்சி செய்யும் பண்பே மனிதப் பண்பு.

இந்தப் பண்பு உள்ளவர்களாகத் திகழ்ந்ததால்தான் காந்தியடிகள், அறிஞர் அண்ணா போன்றோரை இன்றும் போற்றுகிறோம். அவர்களைத் தெய்வமாக மதிக்கிறோம்.

அண்ணா தெய்வம் ஆக்கப்பட்டதேன்?

அமெரிக்காவுக்கு சத்திர கிசிச்சைக்காகச் சென்று வந்த அறிஞர் அண்ணா நன்றாக ஓய்வெடுக்க வேண்டும் என்று டாக்டர்கள் சொன்னார்கள். ஆனால் அண்ணாவால் டாக்டர்களின் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு நடக்க முடிய வில்லை.

எப்பொழுதும் போல் மக்கள் பணியில் ஈடுபடத் தொடங்கி விட்டார். சென்னை மருத்துவமனையில் தங்கியிருந்து சிகிச்சை பெற வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. இந்தக் கட்டத்தில்

''தாம் பிறந்த தமிழ் நாட்டுக்கு "தமிழ்நாடு" என்று சட்ட ரீதியாகப் பெயர் வைக்க வேண்டும் என்ற தனது கோரிக்கையை புதுடெல்லி மத்திய அரசு ஏற்று அதற்கு வேண்டிய சட்டத் திருத்தங்களைச் செய்ததும், 1968ஆம் ஆண்டு பொங்கல் பண்டிகையன்று சென்னையிலே வெற்றி விழா கொண்டாட ஏற்பாடாகி இருந்தது.

அண்ணா அந்தக் கூட்டத்திலே கலந்து கொண்டு பேச விரும்பினார். டாக்டர்கள் அவரை எச்சரிக்கை செய்தார் கள், இந்த நிலையில் நீங்கள் கூட்டத்தில் பேசுவது உங் களுக்குக் கூடாது என்று வழி மறித்துச் சொன்னார்கள்.

அந்த டாக்டர்களுக்கு அறிஞர் அண்ணா என்ன பதில் கூறினார் தெரியுமா? "தமிழ்நாட்டுக்கு "தமிழ்நாடு" என்று பெயர் வைத்து விட்ட வெற்றி விழாவிலே பேச முடியாது என்றால் என்னுடைய இந்த உடல் இருந்தென்ன, இல்லா மல் போனால் தான் என்ன? நான் கட்டாயம் பேசத்தான் போகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டார்.

கூட்டத்தில் அவர் பேசி விட்டுத் திரும்பவும் மருத்துவ மனைக்குப் போக வேண்டியதாயிற்று. போனவர் திரும்பி

வரவில்லை அவர் கடைசியாகக் கலந்து கொண்ட பொதுக் கூட்டம் தமிழ்நாடு பெயர் சூட்டு வெற்றி விழாதான்.

தனக்கென வாழாது பிறர்க்குரியாளராக வாழ்ந்தவர் அவர். தமிழர் வாழ்வும், தமிழ்நாட்டின் உயர்வுமே அவருடைய லட்சியங்களாக இருந்தன.

அந்த லட்சிய வாழ்க்கையே வாழக்கை என்று வள்ளுவர் கூறுகிறார். அப்படி வாழ்பவர்களே வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர்கள் என்றும் வள்ளுவர் சொல்கிறார். வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர்கள் வானுறையும் தெய் வத்துள் வைக்கப்படும் என்றும் அவர் அறிவுறுத்துகிறார். அதனாலேயே இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், காந்தியடிகள் போன்றோரைத் தெய்வ மாக்கியுள்ள நாம், அறிஞர் அண்ணாவையும் தெய்வமாக்கிக் கொண்டுள்ளோம்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் என்று வாழ்க்கைக்கு வழி காட்டினார் வள்ளுவப் பெருந்தகை. அந்த வழியில் தனக் கென வாழாது பிறர்க்குரியராக வாழ்ந்தவர்களுள் அண்ணாவும் ஒருவர். அதனாலேயே அவர் தெய்வம் ஆக்கப்பட்டிருக்கிறார்.

# 14. அறா அலியரோ அவருடைக் கேண்மை!

நெய்தல் நிலத்து நல்லோன் ஒருவனைக் கணவனாகப் பெற்றுக் களித்து வாழ்ந்திருந்தாள் ஒரு நங்கை. மனைவி பால் மாறாக் காதல் கொண்டிருந்த அவன் உள்ளத்தில் கடமையுணர்வும் இடம் பெற்றிருந்தது. அதனால் அவளை மணந்து மனையறம் மேற்கொண்ட சின்னாட்களுக்குள்ளாகவே, தங்கள் இல்லற வாழ்க்கைக்கு இனிய துணை புரிவதாய பொருளீட்டி வரும் பணியில் சென்றது அவன் மனம், அது கிடைக்கும் கடல் கடந்த நாடுகளுக்கும் கலம் ஏறிச் சென்று விட்டான் அவன்.

பொருளின் இன்றியமையாமையை உணர்ந்து அவளும் அவன் போக்கிற்கு உடன் பட்டாள்; அவன் போய் விட்டான். வேண்டும் பொருளீட்டிக் கொண்டு விரைவில் வந்து விடுவேன் என்று கூறிச் சென்றவன் நாட்கள் பல ஆகியும் வந்திலன்; கடல் கடந்த நாடுகளுக்குச் சென்றவர் மீள்வதற்குரிய கீழ்க் காற்று வீசும் காலமும் தொடங்கி விட்டது. ஆயினும் அவன் வந்திலன்; காதலனைப் பிரிந்து தனித்துக் கிடந்து துயருறுவாள், அவன் வாராக் காலும் வளரவளர மேலும் மேலும் துயர் உற்றாள். அவள் உடல் நலனும் குன்றிற்று.

நாள் முழுதும் வீட்டினுள் அடைபட்டுக் கிடந்து வருந்துவாள், மனத்துயரம், மனைப்புறம் சென்று உலாவி,

மாலைக் காட்சிகளைக் காணின் சிறிது மறையும் என்று கருதிய தோழி ஒரு நாள் மாலை, அவளைக் 'கடல்வரை சென்று வரலாம் வா' என அழைத்தாள். தலைவன் ஏறிச் சென்ற கலம், கொண்டல் கொணர வந்து கரை சேர்கிறதா எனக் கண்டு வரலாம் என்ற கருத்தால் அவளும் அதற்கு இசைந்தாள். இருவரும் கடற்கரை நோக்கி நடந்தனர்.

இடை வழியில் ஒரு காட்சி : வயலில் வெண்ணெல் கதிர் முற்றித் தலை சாய்ந்து கிடந்தது. நாரை ஒன்று வரப்பில் அமர்ந்து இரை தேர்ந்து உண்டு உவந்திருந்தது. சிறிது நாழிகைக்கெல்லாம் வயலுக்குரியார் கூட்டமாய் வந்து வயலில் இறங்கிக் கதிர்களை அறுக்கத் தலைப் பட்டனர்; அவர் செயல் கண்ட நாரை, ஈங்கிருந்து இரை தேர்தல் இனி இயலாதே என ஏங்கிச் செயலற்று சிந்தை நொந்தது. நாரை அவ்வாறு உளம் நொந்து கொண்டிருக் கும்போதே களம்பாடி வாழ்வார் அவண் வந்து சேர்ந் தனர். வந்தவர் கழனிக்குரியாரை வாழ்த்த, தம் தண்ணுமை களை முழக்கினர். அவ்வொலி நெஞ்சு வருந்தி நிற்கும் நாரையைத் துணுக்குறச் செய்து விட்டது. உடனே அது அது காறும் தனக்கு உணவூட்டி வாழ்வளித்து வந்த வயலை மறந்து விட்டு தான் இருந்து வாழும் பனை மரத்து மடலுக்குப் பறந்து சென்றது.

இக்காட்சியைக் கண்டவாறே இருவரும் கடற்கரையை அடைந்தனர்; ஆங்கு வாணிபம் கருதி வெளிநாடு சென்றி ருந்த கலங்கள் வரிசை வரிசையாக வந்து கரை சேரும் காட்சியைக் கண்டனர்; அவ்வாறு கரையேறும் கலங்களுள் தன் காதலனுக்குரிய கலம் இல்லாமையை அப்பெண் கண்டு கொண்டாள். அவள் கலக்கம் மிகுந்தது. கண்கள் நீர் சொரிந்தன. கவலையை மாற்றிக் களிப்பூட்ட உதவும் எனும் கருத்தோடு காண வந்த கடற்கரைக் காட்சிகள் அவள் கலக்கத்தை மேலும் மிகுவிப்பனவாகவே தோன்றின.

கானற் சோலைக்கு அணித்தாக ஓடிய கழியைப் பார்த்தாள்; ஆங்கு, மலர்ந்து மணம் வீசிய மலர்கள், மாலை வரவால், வாய் குவிந்து வாடுவதைக் கண்டாள்.

அது காதலன் வாராமையால் தன் உள்ளம் உவகை இழந்து, உணர்விழந்து சோர்ந்து போவதை நினைவூட்ட நின்று வருந்தினாள், கடலை நோக்கினாள். அது 'ஓ' எனப் பேரிரைச்சல் எழுப்பி, அலை வீசி ஆர்ப்பரிப்பதைக் கண்ணுற்றாள். காதலன் வாராமையால் துயர் உற்றுத் துன்ப அலைகள் தொடர்ந்து வீசும் தன் உள்ளத்தையே அக்கடலில் கண்டாள்; அவள் கண்கள் குளமாயின; கடல் நீரிலும், கழி நீரிலும்மீன் கவர்ந்துண்டு உயிர் வாழும் பறவை கூட்டம், வாழிடம் மீள்வதற்குரிய மாலைக் காலம் வந்ததும், தம் தொழிலைக் கைவிட்டுக் கரைக்கண் வளர்ந்திருக்கும் புன்னை மரங்களில் உள்ள தம் கூடுகளை அடைந்து அடங்குவதைக் கண்டாள்.

இப்பறவைகளுக்கு உள்ள உணர்வுதானும் நம் கணவர்க்கு இல்லையே; கடமை முடிந்ததும் விரைந்து வீடடைய வேண்டும் என்ற உணர்வு அவர்க்கு உண்டாகவில்லையே என எண்ணினாள். உள்ளம் நொந்தாள்; உள்ளம் நொந்திருப்பாளை ஆங்கு ஒலித்த வண்டோசை கவர்ந்தது.

வண்டுகள் சில கரைக்கண் காணப்படும் மரஞ்செடிகளின் மலர்களுக்கும், கழிப் பூக்களுக்குமாக மாறி மாறித் திரிவதைக் கண்டாள். உயிர்கள் எல்லாம் ஒருங்கே அடங்கும் அந்திக் காலத்தில் அவ்வண்டுகள் மட்டும் அலைந்து திரியும் அக்காட்சி, பொருள் தேடிப் போனவர் எல்லாம் மீண்டு வந்து மனை புகவும், தன் காதலன் மட்டும் மீளாது பொருள் மேல் சென்ற வேட்கையால் போன நாட்டில் அலைந்து திரியும் காட்சியை அவள் அகக் கண் முன் கொணர்ந்து காட்டக் கலங்கிக் கண்ணீர் சொரிந்தாள்.

அப்பெண்ணின் அகத்தெழு துயரைத் தோழி அறிந்து கொண்டாள். இவளை இவ்வாறு வருந்த விடுத்துச் சென்று இன்னமும் வந்திலனே. அவன் அன்பு இருந்தவாறு என்னே! என எண்ணி வருந்தினாள். வருந்தியதோடு நில்லாது, இவளை இவ்வாறு துயர்க்கடலில் ஆழ்த்தி வருத்துவதினும், அவனோடு கொண்ட நட்புத் தொடர்பு அறுந்து போகினும் நன்றாம் என நாக் கூசாது கூறியும் விட்டாள்.

தோழி கூறிய சுடுசொல், அப்பெண்ணின் செவியில் சென்று தாக்கிற்று; அவள் நிலை கலங்கிப் போனாள்; நட்பின் திறம் அறிந்தவள் அப்பெண்; தனக்கு உணவளித்து உயிர் ஓம்பிய நீர்நிலை நீர் வற்றிப் போனதும் அந்நீர் நிலையை மறந்தோடும் மாண்பிலா உயிர் போன்றதன்று அவள் உயிர் நிலை; அந்நீர் நிலை நீர் அற்றுத் தன் உயிர் போக்கும் நிலை உற்றபோதும், அந்நீர் நிலையை விட்டு நீங்காது வாழும் ஆம்பற் கொடி போன்றது அவள் உயிர்.

கணவன்பால் அத்தகைய உயரிய நட்பே கொண்டிருந் தாளாதலின், தோழி கூறியது கேட்டு நெஞ்சு நடுங்கினாள்; வரும்போது வழியில் கண்ட வயற் காட்சியே, தோழியை அம்முடிவிற்குக் கொண்டு விட்டது போலும்: நெல்லரிவார் வருகை கண்டு அஞ்சியும், களம்பாடுவார் முழக்கிய தண்ணுமை ஒலி கேட்டு வெருவியும், தனக்கு வாழ்நாள் முழுதும் உணவளித்து உயிர் ஓம்பும் வயலை விடுத்து ஓடிய நாரை போல், பொருள் மேற் சென்ற வேட்கை மிகுதியால் கணவன் தன்னைத் தனியே விடுத்துப் பிரிந்து போனமை யாலும், அவன் போயிருக்கும் பொழுது,மாலையும் மனத்தை மருட்டும் நிகழ்ச்சிகளும் மேலும் துயர் செய்வதாலும், தான் அவன் அன்பைத் துறந்துவிட வேண்டும் எனத் துணிந்து விட்டாள் போலும். அது உயர்ந்த நட்புடையார்க்கு ஒழுக்கம் ஆகாதே; தோழி இதை அறியாதவள் அல்லள். அறிவே உருவாய் அமைந்த அவளை அந்த முடிவிற்குக்

கொண்டு விட்டது தன் கவலையும் கண்ணீருமேயாம் என உணர்ந்தாள்.

உடனே தோழியை நோக்கி, "தோழி! மரவினம், மாவினம் முதலாம் அனைத்துயிர்களும், மாலை வந்துற்றதும் செயலற்று அடங்கியுள்ளன. ஆனால் அவற்றை அந் நிலையில் இருக்க விட்டிலது இவ்வாடை; இதோ பார்; இதுகாறும் அசைவற்று அடங்கியிருந்த இத் தாழையை இப்போது வீசும் வாடைக்காற்று, பேயாட்டம் ஆட்டிஅலைக் கழிப்பதைக் காண்; தாழையைத் தளர வைக்கும் அதே வாடைதான், துயர் அடங்கியிருந்த என் நெஞ்சையும் துன்பத்திற்குள்ளாக்குகிறது. வாடையால் வருந்தியே என் நெஞ்சம் செயலிழந்து துயர் உறுகிறது. நம்மைத் தனியே விடுத்துப் பிரிந்து போய் நம்மை வருத்தும் அவர், விரைவில் மீண்டு வரும் அருள் உள்ளம் அற்று ஆங்கே வாழ்வதால் நம்மை மேலும் வருத்துகிறார் என்பது உண்மையே என்றாலும், இப்போது நம்மைப் பெரிதும் வருத்துவது இவ் வாடையே ஆகும்.

ஆகவே அவர் நட்பு அழிந்து போக ஆசைப்படுவது அறிவுடைமையாகாது? அவர் துன்பமே தரினும், அவரொடு கொண்ட நட்பு அழிவுறாது என்றென்றும் நிலைபெற்று வாழ்வதையே விரும்புகிறேன் நான்; அவரை அடைந்து அவர் மார்பிற் கிடந்து இன்புறும் இனிய வாழ்க்கையை விரும்பி அவர்பால் சென்று, அவரையே சுற்றிச் சுற்றித் திரியும் நம் நெஞ்சு அவர் நட்பை இழந்து நம்பால் வராதிருப்பதையே விரும்புகிறேன், நான். தோழி! அவரை மணந்து அவரால் மாண்புற்ற நாம் இப்போது அவர் கடமையுணர்வால் காதல் உணர்வு அற்றுக் கிடக்கிறார் என்பதால் அவரோடு கொண்ட நட்புறவை அறுத்துக் கொள்வதோ, அவரை அறவே மறந்து விடுவதோ அழகல்லவே; அது வழியில் கண்ட நாரை போலும், நன்னெறி அறியா நயமிலிகள் செய்யும் செயல் அல்லவோ? ஆகவே, தோழி!

அவ்வெண்ணத்தை இப்போதே மறந்து விடுவாயாக" என அவளுக்கு அறிவுரை புகட்டினாள்.

கொடுமையே செய்யினும் கொண்டானை மறந்து விடுதல் குடிப்பிறந்தார்க்குக் கூடாது எனக் கருதும் அப் பெண்ணின் பேருள்ளம் வாழ்க.

"கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீல நிறப் பெருங்கடல் பாடு எழுந்து ஒலிப்ப,
மீன்ஆர் குருகின் மென்பறைத் தொழுதி
குவை இரும் புன்னைக் குடம்பை சேர,
அசைவண்டு ஆர்க்கும் அல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சம் கையறுபு இனையத்
துயரம் செய்து நம் அருளாராயினும்
அறா அலியரோ அவருடைக் கேண்மை;
அளி இன்மையின் அவணுறை முனைஇ
வாரற்க் தில்ல தோழி! கழனி
வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடல் சேக்கும் துறைவன்
இன்துயில் மார்பில் சென்ற என் நெஞ்சே"

**திணை :** நெய்தல்

**துறை :** தலைமகன் பொருள்வயின் பிரிந்த வழி, தலைவியின் துயர்கண்டு வருந்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.

புலவர் : குன்றியனார்.

1. மாலை: வரிசை வரிசையாக;
2. பாடு : அலையோசை
3. ஆர் : உண்ணும்; பறை: இறகினை உடைய; தொழுதி—கூட்டம்;
4. குவை ; பருத்த; இரும்:பெரிய;
5. அல்குறு காலை : உயிர்கள் அடங்கும் அந்திக் காலம்;
6. தூங்கி: அசைந்து;
7. அழிதக: வருந்த; கொண்டல்; கீழ்க்காற்று; கழி படர்—மிக்க துன்பம்
8. கையறுபு: செயலற்று; இணைய: வருந்த;
10. அறா அலியர்; அழியாதிருக்குமாக
11. அளி: அருள்; அவண் உரை: ஆங்கு வாழ்தலை; முனைஇ—வெறுத்து;
12. தில்ல ; விருப்பத்தை புலப்படுத்தும் இடைச்சொல்;
14. வெரீஇய—அஞ்சிய;
15. செறி—திரண்ட; மடை: மூட்டு வாயினை உடைய; வயிரின்—கொம்புவாத்தியம் போல்; பெண்ணை பனைமரம்:

சேக்கும் : தங்கும்.

# 15. தமிழின் இனிமை

தமிழ்மொழி இனிமை வாய்ந்தது. ''இனிமையால் இயன்ற இளமகளிர்'' என்ற பொருள்படவரும் ''தமிழ் தழீஇய சாயலவர்'' என்ற தொடரில் வரும் ''தமிழ்'' என்ற சொல்லே, இனிமை எனும் பொருள் தருவதாகும் எனக் கூறித் தமிழ்மொழிக்குப் பெருந்தொண்டு புரிந்துள்ளார் சீவக சிந்தாமணி என்னும் பெருங்காப்பியப் பேராசிரியர் திருத்தக்கத் தேவர்.

'ஒண் தமிழ்', 'தேமதுரத்தமிழோசை,' 'தமிழ் எனும் இனிய தீஞ்சொல்' என்றெல்லாம் பெயர் சூட்டிப், புலவர்கள், தமிழின் இனிமைப் பண்பை பாராட்டிப் பரவியுள்ளனர்.

இனிய சொற்களைத்தேர்ந்து, இனிமையாக சொல்லாட விரும்பியவர் தமிழர்; தாம் கூற விரும்பும் ஒவ்வொரு கருத்தும் இனிமையுடையவாதல் வேண்டும்; இனிக்கும் வகையில் உரைக்கப் பெறுதல் வேண்டும் எனவும் விரும்பினார்கள். அவ்வாறே உரைத்தும் வந்தார்கள். செந்தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் இச்சிறப்புடையவாகும்.

நயம்பட உரைக்கும் நாநலம் வாய்க்கப் பெற்றவர் தமிழர். மக்கள் இன்சொல் கேட்க மகிழ்வரேயல்லது வன் சொல் கேட்க மகிழார் என்ற மக்களின் மனவுணர்வின் உண்மையை உணர்ந்தவர் தமிழர். ஆகவே, அவர்கள் என்றும், எங்கும், கேட்டாரைப் பிணிக்கும் வகையில் சொல்லாடித் தம்மை விரும்பும் வகையில் கேளாரையும் வயப்படுத்தி வெற்றி கண்டு வாழ்ந்தனர். இனிய சொற்கள் இருப்பவும், இன்னாத சொற்களை வழங்குதல், இனிய

கனிகள் இருக்கவும், இன்னாத காய்களைத் தேடித் தின்பதற்கு நிகராம் என நினைந்து, இனிய சொற்களையே தேர்ந்தெடுத்து வழங்கினார்கள்.

இனிக்கப் பேசி இறவாப் பெருநிலை வாழவேண்டும் என்று விரும்பிய தமிழர்க்கு, அவர் வழங்கும் மொழியும் பெருந்துணை புரிந்தது. இனியவே வழங்கிய அவர்களின் மொழியும், முழுக்க முழுக்க இனிக்கும் ஒலிகளினாலேயே உருவாகித் திகழ்ந்தது. ங், ஞ், ந், ண், ம், ன், போலும் மெல்லொலிக் கலப்பால், தமிழ்மொழி உருவாகத் துணை புரியும் சொற்களனைத்தும், இன்னொலியுடையவாகவே ஒலித்தன. அதனால், தமிழ்மொழி இனிமை வாய்ந்து திகழ்கிறது.

## செந்தமிழ் இலக்கியங்கள்

செந்தமிழ் இலக்கியங்களின் சிறப்பு, அவ்விலக்கியச் செல்வங்களைத் தம் அழியாப் பெருநிதியாகப் படைத்த தமிழ் மக்கள் பெற்றிருந்த பெருஞ்சிறப்பின் விளைவாகும். கரும்பு களர் நிலத்தில் விளையாது; இனிய கருத்தும் இனிக்கும் சொற்களும், தீயொழுக்கம் உடையார்பால் தோன்றுவது இயலாது; உள்ளத்தின் ஒளியே உரையில் புலப்படும். ஆகவே, தூய உள்ளம் உடையாரிடத்து மட்டுமே தூய சொற்கள் தோன்றும்; அவர் செயலே தூய்மையில் தோய்ந்து திகழும். ஆகவே, இனியவை உரைக்கும் நாநலம் உடையார், இயல்பாலும் இனியரே ஆவர்.

தமிழ், இனிமைப் பண்பில் தலைசிறந்து விளங்குகிறது என்றால், அம்மொழிக்கு உரியோராகிய தமிழர் தலை சிறந்த நாகரிகம் வாய்க்கப் பெற்றவராதல் வேண்டும். இது உண்மையென்பதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் காட்டும்.

படப்பிடிப்பைக் காணும் வாய்ப்பினை பெற்றார் அனைவரும் உணர்வர்.

பழைய தமிழ் இலக்கியங்கள், அகப்பொருள் உணர்த்துவன, புறப்பொருள் உணர்த்துவன என இருபெரும் பிரிவாகப் பிரிக்கப்படும். ஒருவனும் ஒருத்தியும் கலந்து வாழும் அன்பு வாழ்க்கையில் அவர் மனத்திடை நிழலாடும் உயிரோட்டங்களை உள்ளவாறே புறத்தாரும் உணரும் வகையில் உணர்த்துவன அகப்பாடல்கள்; அம்மக்களின் அகவாழ்விற்குத் துணையாய் அமைந்து, அதை வளப்படுத்த உதவும் பொருளீட்டும் வகை, போராற்றும் வகை, அரசியல் அறம் ஆகியவற்றை உணர்த்துவன புறப்பாடல்கள்.

பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த நம் பழம் பெரும் மூதாதையர் தம் பண்பாட்டுப் பெருமையினை, இற்றைத் தமிழரும், பிறரும் அறிந்து கொள்ளுதல் வேண்டும் என்றஅவாவின் விளைவாக அகப்பொருளும் புறப்பொருளும் உடையவாகஆயிரம் ஆயிரம் பாக்களைப் பாடிச் சென்றார் கள் அக்காலப் புலவர் பெருமக்கள்.

ஆனால் அப்பாக்களின் களஞ்சியத்தை அழியாமல் காக்க வல்ல வாய்ப்பு, இன்று உள்ளது போல் அன்று இல்லாமையால் எத்தனையோ ஆயிரம் பாக்கள் மறைந்து அழிந்துவிட்டன. இவ்வழிவு நிலைதொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே வரும்போது, நம் முன்னோர் ஈட்டிவைத்த அப் பெருநிதியை இறவாமல் காக்க வேண்டும் எனும் கடமை யுணர்வு வரப்பெற்று ஒரு சில பெரியவர்கள் முனைந்து முயன்றுஅவ்வகையில் ஓரளவு வெற்றி கண்டனர்.

தம்காலத்தில் கிடைத்த பாக்களையெல்லாம் ஒன்று திரட்டி, அப்பாக்களில் பொதிந்து கிடக்கும் பொருள்வளம், அப்பாக்களின் அடி அளவு, ஆகியவற்றை அளவு கோலாகக் கொண்டு, அப்பாக்களை எல்லாம் பத்துப்பாட்டு, எட்டுத்

தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்ற வரிசைகளில் தொகுத்து நமக்களித்துச் சென்றனர்.

அரசு நிலையாலும், பொருள் நிலையாலும் பண்டுதான் பெற்றிருந்த சீரும் சிறப்பும் இழந்து இழிநிலையுற்றிருக்கும் இக்காலத்திலும், தமிழரும் தமிழகமும் உலக மன்றத்தில் உயர்வாக மதிக்கப்பெறுவதற்கு தமிழ்மொழி பெற்றிருக்கும்,

தாழாத் தனிச் சிறப்பு வாய்ந்த பழம் பெரும் இலக்கியச் செல்வங்களே காரணமாகும். ஒல்காப் புகழ் கொண்ட தொல்காப்பியம் உடையது எங்கள் தமிழ்; எட்டுத் தொகை உடைமையால் ஈடிலாப் புகழ் கொண்டது எங்கள் தமிழ்: பத்துப் பாட்டால் பாரோர் புகழ் கொண்டது எங்கள் பைந்தமிழ்; வள்ளுவர் வழங்கிய வான் குறள் உடையது எங்கள் தமிழ்; நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணியாரங் கொண்டது. எங்கள் தமிழ்; முச்சங்கம் கண்டது; எங்கள் தமிழ்; இயல் உடையது; இசை உடையது இனிய கூத்துடையது எங்கள் தமிழ் என்றெல்லாம் இன்று பெருமை பாராட்டுகிறோம் நாம்.

அப்பெருமையை இன்று நாம் அடைய, அன்று அவற்றை ஆக்கி அளித்தார்கள் புலவர் பெருமக்கள் பல்லோர்; அப் புலவர்கள் ஆன்றவிந்தடங்கிய அறிவுடையராய் அருந்தமிழ்ப் பாக்களை ஆக்கி அளித்த அப்பணியினை, அன்று மேற்கொண்டமையினாலேயே, இன்று நாம் பெருமை கொள்கிறோம்; அவர்கள் அருந்தமிழ்ப் பாக்களை அளிக்கும் அப்பணியைக் கைவிட்டு, எல்லோரையும் போன்று, தம் வயிற்று வாழ்விற்கானவே தேடி அலையும் அப்பணியை மேற்கொண்டிருப்பரேல் அன்று அருந்தமிழ்ப் பாக்கள் தோன்றியிரா; இன்று நாமும் பெருமை கொண்டிருத்தல் இயலாது.

அப்புலவர் பெருமக்கள் தம் வாழ்விற்காம் வகை தேடி உழலாது அமிழ்தினும் இனிய அருந்தமிழ்ப் பாக்களைப் பாடிக் கிடக்கும் பணியினராக அன்று வழி செய்து தந்தவர்; அன்று நாடாண்ட அரசர்களும், அவ்வரசர்களே போலும் சீருடைச் செல்வர் சிலருமே யாவர். அவர்கள், அப்புலவர்கள் வேண்டும் போதெல் லாம். வேண்டிய பொருளை விரும்பி அளித்து வந்தனர்.

அரசரும் பிறரும் பொருள் அளித்துப் பேணிப் புரந்த மையால், புலவர்கள் பொருள் தேடியலையும் பணியற்றவ ராயினர்; வாழ்வு பற்றிய கவலை அவர்க்கு இலதாயிற்று; அதனால் அவர்கள் உள்ளத்தே அமைதி நிலவிற்று; அவ்வமைதி நிறைந்த உள்ளத்தோடு உலகத்தை ஊன்றி ஊன்றி நோக்கினார்கள்; உலகம் அவர் உள்ளத்தே உருப் பெற்றது; ஆண்டு உருப் பெற்ற உலகம், அவர் உரையில் இடம் பெற்றது; உயிரோவியமாக வெளிப் போந்தது; உலகியல் உணர்த்தும் பாக்கள் பலப்பல உண்டாயின.

ஆகவே, அரிய பாக்களைப் பாடி அன்று மொழி வளர்த்தவர், அவ் அருந்தமிழ்ப் புலவர்களும், அப்புலவர் களுக்கு பொருள் அளித்துப் பேணிய புரவலர்களும் ஆவர்.

## தமிழ்நாடு

உலக அரங்கில், தமிழ்நாடு உயர்ந்து விளங்கிய காலம் ஒன்று இருந்தது; உலகத்தார்க்கெல்லாம், அறுசுவை உணவளித்து அவர் உடலை ஓம்பியும், ஆன்ற அறிவளித்து, அவர் உயிரை ஓம்பியும் உயர்வுற்ற காலம் அது. உலக நாடுகள் அனைத்திலும் அறிவில், ஆற்றலில், செல்வத்தில் செழுமையில், பொன்னில், பொருளில், நாகரீக நற்பண்பில் தனி சிறந்தது எங்கள் நாடு என்று, இன்று பெருமை கொள்ளும் நாடுகள், உலக மக்கள், தங்கள் உணர்வாலும்

உணரலாகா அத்துணை இருள்செறிந்து விளங்கிய அக்காலத்தில், நாகரிகத்தின் நடுநாயகமாய், நல்லாட்சிக்கோர் எடுத்துக் காட்டாய், அறிவொளி வீசும் பெருநாடாய்ப் பெருமையுற்றிருந்தது நம் தமிழ்நாடு.

தமிழ்நாடு, இமயம் முதல் குமரி வரையுள்ள பெருநிலப் பரப்பினைக் கொண்ட பெரு நாடாய் விளங்கிய காலம் உண்டு.

"தென்குமரி வடப்பெருங்கல்
குணகுட கடலா எல்லை"

(மதுரைக் காஞ்சி :70—71)

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"

(புறம்—6)

எனவரும் பாடல் வரிகளை அறிக. வடவெல்லை, விந்திய மாகக் குறைந்தது. பின்னர்; இறுதியாக, வேங்கடமும், குமரியும் வடதென் எல்லைகளாக விளங்கி வந்தன பலநூறு ஆண்டுகளாக. தொல்காப்பியர் காலத்திலேயே இந்நிலை உண்டாகி விட்டது என்ப

"வட வேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்"

(தொல். பாயிரம்)

தமிழகம் பண்டு தன்னேரில்லா பெருவளம் பொருந்திய நாடாய் விளங்கியதனால் தான் தமிழகத்தின் மீது ஆரியர் படையெடுத்து வந்தனர்; கோசர் படையெடுத்து வந்தனர்; வடுகர் வந்தனர்; வம்பமோரியர் வந்தனர்; அவ்வாறு படை

யெடுத்து வந்த அவர்கள் அனைவரும் தமிழ் நாட்டுச் செல்வங்களைக் கொள்ளையிட்டுச் செல்வதில் குறியாய் இருந்தனரேயல்லது தமிழக ஆட்சியைக் கைப்பற்றி ஆள்வதில் குறியாய் இருந்தாரல்லர்.

## தமிழ் வேந்தர்

தமிழ்நாடு, மிகப் பழைய காலமாகவே, சேர, சோழ பாண்டியர் என்ற மூவேந்தர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. இந்நாட்டை, 'மூவேந்தர் நாடு' என்று பெயரிட்டு அழைப்பர், ஆசிரியர் தொல்காப்பியனார். 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' என்பது தொல்காப்பியம்.

(பொருள்: செய்யுள் 79)

மூவேந்தர் ஆட்சி, மேற்கே நிலவிய உரோமானியப் பேரரசைப் போலவும், கிழக்கே நிலவிய சீனப்பேரரசைப் போலவும், பழமையும் பெருமையும் வாய்ந்த பேரரசாய் திகழ்ந்தது. இவ்வரசுகளை அமைத்த முதல்வர் இன்னார் என்பதை எண்ணத்தால் எண்ணிக்காணலும் ஒண்ணாதாய் உளது. இவர்தம் பழமை பற்றிப் பேசவந்த பெரியோரெல்லாம் "கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய முதுகுடி" என்றும் "படைப்புக்காலம் தொட்டு மேம்பட்டு வரும் குடிகள்" என்றுமே கூறி அமைந்தனர்.

இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகட்கு முற்பட்ட காலத்தே, இந்தியப் பெருநிலப்பரப்பனைத்தையும் தன் ஒரு குடைக் கீழ் வைத்து உலகாண்ட மௌரியப் பேரரசனாம் அசோகனே, சேர, சோழ பாண்டியப் பேரரசுகள், என் ஆட்சி கடங்காப் பேரரசுகளாம் எனக் கூறுவனாயின் இந் நாடுகளின் பழமையும், பெருமையும் கூறத் தக்கன ஆமோ?

வடமொழியின் முதற் பெருங் காவியமாகிய வான்மீக இராமாயணமும், பாரதமும், மூவேந்தர் நாட்டின் தனி

சிறப்புக்களையும், அவ்வரசர்களின் ஆற்றற் பெருமைகளை யும் பாராட்டிக் கூறுகின்றன; என்னே, தமிழ்நாட்டின் தொன்மை! என்னே தமிழரசர் தம் பெருமை!

தமிழ்நாடு வயல் வளத்திலும். வாணிக வளத்திலும் சிறந்து, உலக அரங்கின் உயர்ந்த இடத்தில் அமரப் பெருந் துணை புரிந்தவர், அத்தமிழ்நாட்டை, அன்று ஆண்டிருந்த முடியுடை மூவேந்தர்களே என்றாலும், அத்தமிழ்நாடு இன்று தாழந்த நாடாய் தளர்ந்து போனமைக்கும் அவர் களே காரணமாவர்.

மூவேந்தர்கள் மொழியை முன் நிறுத்தி ஒற்றுமை உள்ளம் கொண்டு உலகாள்வதற்கு மாறாக, சேரர், சோழர், பாண்டியர் என்ற குலப் பெருமையே குறிக் கோளாய் ஒற்றுமை குலைத்து வேற்றுமையை வளர்த்து வந்தனர்: மூவேந்தர் குலத்தில் பிறந்த ஒவ்வொருவரும், பிறரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணத்தோடே பிறந்தனர். ஒரு குலத்தில், ஒரு காலத்தில், ஆற்றல் மிக்க அரசன் ஒருவன் பிறந்து விட்டால், அவன் பிற இரு குலத்து அரசர்களையும் வென்று அடக்கி, அரசர்க்கு அரசனாய் வாழ ஆசை கொள்வதும், அவன் பெருமை கண்டு மனம் பொறுக்க மாட்டாத பிற இரு குலத்து அரசர்களும் ஒன்று பட்டுக் குறுநிலத் தலைவர்களின் துணையையும் பெற்று, அவனோடு சமர் புரிந்து அவனை அழிக்க முனைவதும், அக் கால அரசியலின் அழிக்க முடியாத வழக்கங்களாகி விட்டன.

அம்மட்டோ? ஒரு குலத்தவர், பிற குலத்தவரோடு போரிட்ட நிலையோடு நின்று விடவில்லை. ஒரு குலத்தில் பிறந்தவர்களுக்குள்ளேயே ஒருவர் ஒருவரோடு போரிட்டுக் கொள்ளவும், மகன் தந்தை மீது போருக்கு எழவும், தந்தை தான் பெற்ற மகனையே போரிட்டு அழிக்கவும், அக்காலத் தமிழரசர்கள் உரிமை பெற்றிருந்தனர்.

# 16. சொல்லின் எவனோ?

கணவன் பரத்தையர் தொடர்பு கொண்டு, அவர்சேரி வாழ்க்கையிலேயே ஆழ்ந்து விட்டமை அறிந்து வருந்தினாள் ஒரு பெண், அவள் கணவன் அவளை மணப்பதற்குமுன் அறியாதவனோ, அவள்மீது விருப்பம் இல்லாமலே மணம் செய்து கொண்டவனோ அல்லன்; பலர் அறிய மணந்து கொள்வதற்கு முன்பே அவன் அவளை அறிவான்; அவளைக் கண்டு அவள் அழகிற்கு மயங்கி அவள்மீது காதல் கொண்டு அக்காதல் நிறைவேற நெடுநாள் அரும்பாடு பட்டு அவள் அன்பைப் பெற்றுப் பேரின்பம் நுகர்ந்து பழகிய பின்னரே அவன் அவளை மணந்து கொண்டான்.

அன்று அவள் காதலுக்காக அவ்வாறு ஏங்கிக் கிடந்த அவனே, இன்று அவள் மனையில் கிடந்து மாளாத்துயரில் ஆழ்ந்து மடியுமாறு அவளை மறந்து பரத்தையர் சேரி சென்று வாழ்கிறான்.

கணவன் தகாவொழுக்கம் கண்டு அப்பெண் கடுந்துயர் உற்றாள்; அவள் கண்கள் உறக்கத்தை மறந்தன; இரவு பகல் எப்போதும் அவன் நினைவேயாய்க் கிடந்து வருந்தினாள்; அவள் கண்கள் இடைவிடாது நீரைச் சொரிந்த வண்ணம் இருந்தன; அப்பெண்ணின் துயர் நிலையை அவள் தோழி பார்த்தாள்; அவள் நிலையை எண்ணி வருந்தினாள்.

ஒருநாள், அப்பெண்ணின் கண்களில் நீர் கசியக் கண்டு நெடிது வருந்தினாள்; அழுது துயர் உறுவது அழகன்று என அவளுக்கு ஆறுதல் உரைத்தாள். தான் படும் துயர்க்குத் தோழியும் துயர் உறுவதை, அப்பெண்ணின் அன்புள்ளம் தாங்கிக் கொள்ள மாட்டாது தளர்ந்தது; அவள் பொருட்டாவது தான் தன் துயரை மறைத்துக் கொள்ளுதல் வேண்டும் என எண்ணிற்று அவள் தூய உள்ளம்; உடனே, "தோழி! என் துயர்க்கு, நீ நினைப்பதுபோல் நம் காதலர்ப் பிரிவு காரணமன்று; அது குறித்து நான் சிறிதும் கவலையுற்றலேன், என் கண்ணீர்க்குக் காரணம் வேறொன்று உளது; தோழி! நம் மனையைச் சுற்றி வேலிபோல் வளர்ந்திருக்கும் பனைமரத்தின் மடல்களுக்கிடையே கூடுகட்டி வாழும் அன்றில்களில் ஒன்று ஓயாது ஒலிக்கிறதே, அது உன் காதுகளுள் சென்று ஒலிக்கவில்லையோ? இணைபிரியாது வாழும் இயல்பினவாய அவற்றுள் ஒன்று எங்கோ சென்று விட்டது போலும்.

பிரிந்துபோன தன் துணை, மாலை கழிய இரவு வந்துற்ற பின்னரும் வாராமையால் வருந்தி, கூவிக் கூவி அழைக்கும் அதன் குரல், அதன் உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பெருகும் துன்பத்தை வெளிப்படுத்துவது காண்.

அப்பறவை படும் துன்பம் என் உள்ளத்தையும் ஆறாத துயரில் ஆழ்த்தி விட்டது; அத்துன்பச் சுமையை தாங்க மாட்டாதே என் கண்கள் நீர் கசியத் தொடங்கி விட்டன இதுவல்லது, நான் காதலர் குறித்துக் கலங்கவில்லை. ஆகவே அவர் போய் விட்டார் என்றோ, அதுவே என்னைத் துயர் கடலில் ஆழ்த்தி விட்டது என்றோ எண்ணி நீ துயர் உறவேண்டாம் எனக் கூறிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

அப்பெண் கண்ணீர் சொரியக் கலங்கி நிற்கும் நிலை கண்டே வருந்திய தோழி அவள் கூறியன கேட்டு மேலும்

வருந்தினாள். கணவன் மேற்கொண்டிருக்கும் பரத்தையர் தொடர்பே தன் துயர்க்குக் காரணமாகவும் அது காரண மாகத்தான் அழுவதைப் பிறர் அறிந்து கொண்டால் அது தனக்கும் தன் கணவனுக்கும் புகழ்க்கேடாம் எனக் கருதும் உயர்வுள்ளம் உடைமையால், அதை மறுத்து விட்டு, பிறிதொரு காரணத்தைக் கற்பித்துரைக்கும் இவள் பெருந் தன்மையை என்னென்பேன்; அன்றிற் பறவையின் ஆறாத் துயர் கண்டு இவள் உள்ளம் கலங்கும்; இவள் உள்ளம் அத்துணை அருள் நிரம்பியதே என்பதை நான் அறிவேன்; அவ்வருள் உள்ளம் உடைமையால் அன்றோ, அன்று, அவனை ஏற்றுக் கொண்டாள்; தன் பொருட்டு இவன் இத்துணைப் பாடுபடுகின்றனனே என்ற இரக்க வுணர்வு அன்றோ அவளை ஆட்கொள்ளப் பண்ணிற்று.

ஆனால் இன்று இவள் கண்ணீர்க்கு அன்றிற் பறவைகள் பால் கொண்ட அருள் காரணமாகிவிடாது; கணவன் பிரிவுத் துயரால், அதிலும் அவன் பரத்தையர் தொடர் புற்றுப் பழிமிகு வாழ்வு மேற்கொண்டு விட்டான் என அறிந்தமையால் உற்ற பெருந்துயரால் நிறைந்திருக்கும் இந்நிலையில், அவ்வுள்ளத்தில் அருளுணர்வு அரும்பி யிருக்காது; ஆனால், அன்றிலின் துயர்நிலை கண்டே தன் கண்கள் அழுகின்றன என இவள் கூறுவது, காதலன் பிரிவால் துயர் உறுகிறேன் எனக் கூறல் பெருமைக் கேடாம்; புகழ்க்கேடாம் என அறிந்தமையால், அதை எனக்குக் காட்டாது அடக்கிக் கொள்ளுதல் வேண்டும் என்ற பெருமிதவுணர்வு கொண்டமையாலேயாம்; துயர் கொண்டு துடிக்கும் இவள் அதைப் பிறர் அறியாவாறு அடக்கி வாழ இன்னும் எத்துணை துயர்க்கு உள்ளாக வேண்டுமோ? அந்தோ! இவள் நிலை நனிமிக இரங்கற்குரித்து என எண்ணித் துயர் உற்றாள்.

அப்பெண்ணின் துயர்நிலை கண்டு வருந்திய தோழி, இனி வாய்மூடி வாளாய்க் கிடத்தல் கூடாது; இவள் துயர் தீர்க்கும் வழி வகைகளை இன்றே செய்தல் வேண்டும்; இவளை மறந்து வாழும் இவள் கணவனை இன்றே இவள் பால் சேர்த்தல் வேண்டும் எனத் துணிந்தாள்; அப்பெண்ணின் துயர் காணப் பொறாமையால் அவள் அத்துணிவு கொண்டாளாயினும், பரத்தையர் சேரிக்குச் சென்று, இளைஞனுக்கு இவள் நிலையை எடுத்துக் கூறி அழைத்து வருவது எவ்வாறு? அதைச் செய்ய வல்லவர் யார்? பண்புடையார் எவரும் பரத்தையர் சேரிபுக மனம் இசையாரே என்ற கவலை எழச் செய்வதறியாது செயலற்றுக் கிடந்தாள்.

அப்போது அத்தெருவழியே பாணன் செல்வதைக் கண்டாள்; இளைஞன் விரும்பும் பரத்தையரைத் தேர்ந்து அவளுக்கும் அவனுக்கும் உறவுண்டாக்கப் பெருந்துணை புரிந்தவன் அப்பாணனே; இளைஞனுக்குப் பரத்தையர் ஒழுக்கத்தைக் கற்பித்தவனும் அவனே: அதனால் அவனைக் கண்ணுற்றதும் அவன் பால் பெருஞ்சினம் கொண்டாள்; ஆனால் அந்நிலையில் தனக்குத் துணை புரிவன் அவன் ஒருவனே; பரத்தையர் சேரிக்குச் செல்லப் பக்குவப் பட்டவன் அவன் ஒருவனே என உணர்ந்து, உள்ளம் கவர்ந்து எழுந்து ஓங்கிய சினத்தைத் தன்க்குள்ளே அடக்கிக் கொண்டாள். தெருவழியே சென்று கொண்டிருந்த அவனை அழைத்தாள்.

"பாண! பாராட்டத்தக்க பெருமை மிக்க நம் தலைவன் பரத்தையர் சேரி புகுந்து வாழ்கிறான்; பரத்தையர் பால் கொண்டுள்ள ஆசை மிகுதியால் அவன் மனைவியாம் மாண்புடைய இவளை அறவே மறந்து விட்டான்; இன்று இவளை மறந்து வாழும் அவன், அன்று இவள்பால் எத்துணைப் பேரன்பு கொண்டிருந்தான் தெரியுமா? இவள் காதலைப் பெற அவன் எத்துணை அடும்பாடு

பட்டான்; எத்தனை நாள் காத்துக் கிடந்தான்; எத்தனை இடையூறுகளைத் தாங்கிக் கொண்டான்; பிறரால் பணிந்து நிற்க வேண்டாப் பெருநிதி படைத்த அவன் இவள் பொருட்டு எவ்வளவு பணிவு காட்டினான்; இவளை அடையும் ஆர்வ மிகுதியால் அச்சத்தையும் கைவிட்டு வாழ்ந்தான். பாண! இவளோடு களவுக்காதல் கொண்டு வாழ்ந்த காலத்தில் அவன் இவளைத் தேடி நாள் தோறும் வருவன்; அவன் வருங்காலம், கடல் அலை ஓய்ந்து ஒலி அடங்கும் இரவுக் காலமாதலின் தொழில் ஒழிந்து தோணிகளைக் கரைக்கண் விடுத்து, இவள் தந்தையும் தமையன் மாரும் வீட்டிலேயே இருப்பர்; அவர்கள் இருக்கும்போது அங்குச் செல்லுதல் கூடாதே; அவர்கள் நனிமிகக் கொடியவராயிற்றே; அவர்கள் கண்ணில்பட்டு விட்டால் பெருங் கேடு நேருமே என எண்ணி அஞ்சான்; அவர்கள் இருக்கும்போதே இவளைக் காண வருவன்; அம்மட்டோ! இடைவழியில் ஆழம்மிக்க உப்பங்கழிகள் பல குறுக்கிட்டுக் கிடக்கும்.

'அவற்றில் ஆளைக் கொல்லும் சுறா போலும் கொடிய மீன்கள் இரைதேடி அலைந்து கொண்டிருக்கும். அத்தகைய கழிகளைக் கண்டும் அவன் கலங்கி நின்று விடான்; அது மட்டுமன்று இவர்கள் 'களவுக் காதலை அறிந்து கொண்ட இவ்வூர்ப் பெண்டிர் சிலர் ஊரில் அலர் எழுப்பியிருந்தனர். அவ்வலர் கேட்ட அன்னை முதலாயினர் இவள் பால் சினங்கொண்டிருந்தனர். இந்நிலையில் தான் ஆங்கு வருதல் கூடாது. அதனால் இருவர் நலத்திற்கும் கேடுண்டாம் என எண்ணி வாராது இருந்து விடான்; அப்போதும் வருவான்; மாண்பு மிக்க அணிகளால் அழகு பெற்று விளங்கும் நெடிய பெரிய தேரில் வருவான்.

ஊர்ப்புறத்தே நெடிது பொழுது காத்துக் கிடக்க, இவள் வருகையை நோக்கி இரவு பகல் எப்பொழுதும்

இருந்து வருந்துவான். அவ்வாறு வந்து காத்துக் கிடந்தது ஒருநாள் இரு நாள் அல்ல: பலநாள்; அத்தகையவன் இன்று இவளை மறந்து விட்டான்; அன்று அடைவதற்கு அரிதாகத் தோன்றிய இவள் காதல், இன்று கசந்து விட்டது போலும்; அதை மறந்து விட்டான். இங்கு வருவதை அறவே கைவிட்டான்.

"பாண! அவன் இவளை மறந்து விட்டான்; வேறு யாரேனுமாயின் நம்மை மறந்து விட்ட அவன் உறவு நமக்கு என்ன வேண்டிக்கிடக்கிறது என்று எண்ணி, அவனைத் தாமும் மறந்து கைவிடுவர். ஆனால் இவள் அது செய்திலள்; மாறாக, அவனையே நினைந்து நைந்து உருகிறாள். அவள் கண்கள், இரவு பகல் எப்பொழுதும் நீர் சொரிந்த வண்ணம் உள்ளன; அதைக் கண்டு இவளைக் கடிந்து கொண்டாள், இவள் 'நான் என் காதற்கேடு குறித்துக் கண்ணீர் சொரிந்திலேன். தன் காதல் துணை பிரிந்து விட்டதே என்ற கலக்கத்தால் ஓயாது கூவி அழும் அன்றிலின் துயர்கண்டே என் கண்கள் அழுகின்றன, எனக்கூறி தன் துயரை மறைக்கிறாள்; இத்தகையாளை நான் எவ்வாறு காப்பனோ? அறியேன்.

"பாண! நீ ஒன்று செய்யின் நன்றாம்; அவன் பரத்தையர் உறவு கொள்ள உறுதுணைபுரிந்தவன் நீ அன்றோ? அப்பழி நீங்க இன்று ஒன்று செய்; அவன் வாழும் பரத்தையர் சேரிக்குச் செல்; பண்புடைப் பெருமக்கள் எவரும் ஆங்குச் செல்லார்; ஆதலின், எம்பொருட்டு நீ செல்வதையும் நாணுகிறது எம் நெஞ்சம்: பிறர் காணின் எமக்குப் பெரும் பழியாம் என அஞ்சுகிறோம், ஆகவே பிறர் கண்ணில் படாவாறு செல்; சென்று, கடல் நாட்டு வாழ்ந்தமையால் நன்கு நீந்தக் கற்றிருந்தும் பரத்தையர் பெருவெள்ளத்தை நீந்திக் கரையேற மாட்டாது, அதனிடையே கிடந்து உழலும் அவனைக் கண்டு, இவள் நிலையினை அறிவித்துவா; பாண! அவனை அப்பரத்தையர் சேரிக்குக் கொண்டு

சேர்த்த செயலினும் இது கேடுடைத்தாமோ? ஆகாது பாண! அஞ்சாது சென்று வருக" எனக் கூறி அனுப்பினாள்.

தனக்குப் 'பரிசு பல அளித்துத் தன்னைப் புரக்கும் பேரருள் உள்ளத்தினளாய மனைக்கிழத்தியின் மன நிலை அறியாக் காரணத்தால், அன்று அவனுக்குப் பரத்தையர் உறவு கொள்ளத் துணைபுரிந்த பாணன், அவள் துயர் அறிந்த பின்னர், அது தீர்க்க உதவாது வாளாக் கிடப்பனோ; விரைந்து ஓடினான் பரத்தையர் சேரிக்கு.

"கடல்பாடு அவிந்து தோணி நீங்கி,
நெடுநீர்இருங்கழிக் கடுமீன் கலிப்பினும்,
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்,
மாணிழை நெடுந்தேர் பாணிநிற்பப்
பகலுநம்வயின் அகலானாகிப்
பயின்று வரும்மன்னே, பனி நீர்ச்சேர்ப்பன்;
இனியே மணப்பரும் காமம் தணப்ப நீந்தி
வாராதோர் நமக்குயாஅர் என்னாது
மல்லல் மூதூர் மறையினை சென்று
சொல்லின் எவனோ? பாண! எல்லி
'மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்
துணையொன்று பிரியினும் துஞ்சா காண்' எனக்
கண் நிறை நீர் கொடு கரக்கும்
ஒண்ணுதல் அரிவை; யான்என் செய்கோ எனவே."

**திணை :** நெய்தல்

**துறை :** தலைவன் பரத்தையிற் பிரிந்தானாக வருந்திய தலைவியின் துயர் நிலை கண்டு தோழி பாணனுக்குச் சொல்லியது.

**புலவர் :** கருவூர்ப்பூதம் சாத்தனார்

1, பாடு = ஒலி; அலிந்து: அடங்கி; நீங்கினும் என இன்னும் உம்மும் கூட்டிப் பொருள் கொள்க,

2. கடுமீன் = கொடிய சுறாமீன்; கலிப்பினும்: செருக்கித் திரியினும்;

3. வெவ்வாய் = கொடிய வாய்; கௌவை = அலர்;

4. பாணி: தாழ்த்து;

6. பயின்று = பலமுறை; மன்: கழிவுப்பொருள் நின்றது; அந்நிலை இப்போது இல்லை என்பது பொருள்; சேர்ப்பன் = கடல் நாட்டுக் காவலன்;

7. மணப்படும்: கூடுதற்கு அரிய; தணப்ப: பொங்குதலால்; நீந்தி – கடந்து;

8. யார் = என்ன உறவுடையார்; என்னாது : என்று கருதி வெறுத்துவிடாது;

9. மல்லல்மூதூர்: களியாட்டம் மிக்க பரத்தையர் சேரி மறையினை—மறைந்து;

10 எல்லி = இரவு;

11. கரக்கும் = மறைக்கும்.

பாண்! அரிலை, அன்றில் துஞ்சாகான் எனக் காக்கும் சேர்ப்பன், நீங்கினும், கலிப்பினும், தூற்றினும் தேர்பாணி நிற்ப, பயின்று வரும்மன், இனி, காமம்தணப்ப நீந்தி வாராதோர் யார் என்னாது, சென்று யான்என் செய்கோ எனச் சொல்லின் எவனோ எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

# 17. நொச்சியும் உழிஞையும்

மண்ணாசை கொண்டு, அண்டை நாட்டு அரசனோடு போரிடப் போன ஓர் அரசன், போரை விரும்பி மேற் கொண்டவனாதலின், அப்போரை மேற்கொள்வதன் முன்னர், தன்வலி, மாற்றான் வலி, தனக்கு ஆகும் காலம், மாற்றானுக்கு ஆகும் காலம், தனக்கு வாய்ப்புடைய இடம் மாற்றானுக்கு வாய்ப்புடைய இடம், ஆகியவற்றைப் பலமுறை ஆராய்ந்து, ஆராய்ந்து, தன் வலி மிக்க நிலையில், தனக்கு ஏற்புடைய காலத்தில், வாய்ப்புடைய இடமாக நோக்கிப் போர் தொடங்கியிருப்பன்.

ஆனால், அவன் பகைவனாகிய, மண்ணுக்குரிய மன்னவனோ எனில், அத்தகைய முன்னேற்பாடுகளோடு போர்க்களம் புகுந்தவனல்லன்; பகையரசன் படை தன் நாட்டுக்குள் புகுந்து, தன் நாட்டின் ஒரு பகுதியைக் கைப் பற்றிக் கொண்டது என்பதை அறிந்தவுடனே, அப்படையை விரட்டித் தன் நாட்டை வாழ்விக்க வேண்டும் என்ற எண்ணமே முன் நிற்க, விரைந்து களம் புகுந்தவனாதலின் அந்நிலையில், தன் படைபலம் யாது? பகைப் படையின் பலம் யாது? தனக்கு ஏற்புடைய காலந்தானா? தனக்கு வெற்றி யளிக்க வாய்ப்புடைய இடந்தானா என்பனவற்றினை எண்ணிப் பார்த்து அவையெல்லாம் தனக்கு நல்லவாதல் கண்ட பிறகே களம் புகுந்திருத்தல் இயலாது.

உள்ளது ஒரு சில படையே எனினும், அது கொண்டே களம் புகுந்திருப்பன்; தனக்குத் துணை புரிவாரைக் கண்டு அவர் துணையினை நாடிப் பெறுதல் வேண்டும் என்ற நினைவு தானும் அவனுக்கு எழுந்திராது. ஆக இந்நிலைகளால், வந்தவன் கை வலுக்க, இவன் கை வலுவிழக்க, வந்தானை வெல்ல மாட்டாது தோற்றுப் போவது, மண்ணுக்கு உரியானுக்கு ஒரோ வழி உண்டாதலும் கூடும்.

தோல்வியுற்றது தன் படை என்பதினாலேயே, மண்ணுக்குரிய மன்னவன், பகைவனுக்குப் பணிந்து போக வேண்டும் என்பது தேவையில்லை. சிறிது காலம் கழியின் வந்தவனை வென்று ஓட்டுவது இயலும். அதற்குள், அவனுக்கு ஏற்புடைய காலமும் வந்து வாய்க்கும். அவனோடு நட்புடையராகிய அரசர் சிலர், அவனுக்குத் துணையாகத் தம் படைகளை அளிப்பதும் செய்வர். ஆகவே, அக்காலத்தை எதிர்நோக்கியிருப்பது அரசமுறையாகும். ஆகவே அக்காலம் வரும் வரை பகைவனுக்குப் பணியாமலும், அவனால் பற்றப்பட்டுப் பாழுற்றுப் போகாமலும், தன்னையும், தன் படையையும் காத்துக் கொள்ள வேண்டுவது அவன் தலையாய கடமையாகும்.

அக்கடமையைக் குறைவற நிறைவேற்றும் கருத்துடையராகவே நம் கன்னித் தமிழ் நாட்டுக் காவலர்கள், தங்கள் தலைநகர்களைத் தலைசிறந்த அரண்களாக அமைத்து இருந்தார்கள். பேரூர்கள் ஒவ்வொன்றும் பெரிய பெரிய கோட்டைகளாகவே அமைய வேண்டுவது, அக்காலத் தமிழகத்தின், இன்றியமையாத் தேவையாக அமைந்து விட்டது.

பண்டைத் தமிழகம், ஒரு நாடு செல்வத்தில் சிறந்து வாழ வேண்டுமாயின், அது நீர்வள, நில வளங்கள் தரும் வற்றாப் பெருவளங்களோடு, வாணிகத் துறையில் வளம்

பெற்ற நாடாகவும் திகழ்தல் வேண்டும்; வாணிகத்திலும், நில வாணிகத்தைக் காட்டிலும், கடல் வாணிகத்தையே பெரிவாரியாக மேற்கொள்ளுதல் வேண்டும்; விலையுயர்ந்த பொருள்களை வெளிநாடுகளிலிருந்து தான் வாங்குவதை விடுத்து, அப்பொருள்களை அப்புறநாடுகளுக்குக் கடன் வழங்குதல் வேண்டும்; பொருள்களை விற்றுப் பொற்காசு களைப் பெற வேண்டுமேயல்லது, பொற்காசுகளைக் கொடுத்துப் பொருள்களை வாங்குதல் கூடாது; அத்தகைய வாணிகத்திற்குத் துணை செய்யும் வகையில், நாட்டை, வகைவகையான தொழில்களை வளர்த்து வளம் பெருக்கும் நாடாக ஆக்குதல் வேண்டும்; தன் நாட்டுத் தொழில் துறை பிற நாட்டு மக்களின் தேவைகளை அறிந்து, அவர்கள் விரும்பி வாங்கும் வகையில், பொருள்களை வனப்புடைய வாக ஆக்கித் தருதல் வேண்டும், என்பன போலும் வாணிகத் துறை உண்மைகளை உணர்ந்திருந்தமையால், தமிழகத்துப் பேரூர்கள் பெரும் பொருட்களஞ்சியங்களாகக் காட்சி அளித்தன.

இவ்வாறு, தமிழகத்துப் பேரூர்களில் வளம் கொழிக்கவே, அப்பேரூர்களை அரசிருக்கையாகக் கொண்டு ஆண்ட அரசர்கள், வளங்கொழிக்கும் நாடுகளுள் புகுந்து, அவ்வளங்களைக் கொள்ளை கொண்டு செல்வதையே வாழ்வுத் தொழிலாகக் கொண்டு திரியும் ஆறலைக் கள்வர் களாலும், மண்ணாசை மிக்க மன்னர்களாலும், பொன் னாசை மிக்க பெரு வீரர்களாலும், அழிவு நேராவாறு அந்நகர்களைக் காக்க வேண்டும் என்பதில் கருத்துடைய ராயினர்.

அதனால், அப்பேரூர்களைச் சூழவலிய பெரிய அரண் களை அமைக்க வேண்டுவது இன்றியமையாததாகி விட்டது. ஒப்பற்ற பேரரசு அமைத்து ஆண்டு வந்தசோழர் குலக் காவலர்கள், தங்கள் நாடு தந்த பெருநிதியை ஈட்டி வைத்

திருந்த குடந்தை மாநகரைச் சூழ அமைத்திருந்த அரிய காவற் சிறப்பும், தமிழகத்தின் பேரரசுகளுக்கு எவ்வகையிலும் குறைவுறாத வகையில் அவ்வரசுகளை அடுத்து அரசமைத்து வாழ்ந்திருந்த வேளிர் குலக் குறுநிலத் தலைவர்கள், தங்கள் செல்வத்தைக் குவித்து வைத்திருந்த கொங்கான நாட்டுப் பாழி நகரைச் சூழ அமைத்திருந்த அரிய காவற் சிறப்பும் புலவர் பாராட்டும் பெருமையுடையவாயின.

"கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடு தரு நிதியினும் செறிய
அருங்கடிப் படுக்குவள் அறம்இல் யாயே"

அகம்—60

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்"

அகம்—258

என்ற அகநானூற்றுத் தொடர்களைக் காண்க.

தமிழகத்துப் பேரூர்களின் அமைப்பு முறையினைப் பழந்தமிழ் இலக்கியங்களின் கண் கொண்டு நோக்குவார்க்கு, அவை ஒவ்வொன்றும், அரண் அமைப்பின் இன்றியமையாமையினை உணர்ந்து அமைக்கப் பெற்றுள்ளன என்பது புலனாகும்.

ஒரு நாட்டையும், அந்நாட்டின் தலை நகரையும் சூழ, நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்ற அரண்கள் நான்கும் இயற்கையாகவே அமைந்திருப்பது சாலவும் நன்று என்பதே பழந்தமிழ்ப் பெரியார்கள் கண்ட அரண் அமைப்பு முறையாகும்.

"மணி நீரும், மண்ணும், மலையும்,
அணிநிழல் காடும் உடையது அரண்"

என்ற வள்ளுவர் வாய்மொழியினைக் காண்க.

"கான் அரணும், மலையரணும், கடல் அரணும் சூழ் கிடந்த கலிங்க பூமி" என அவ்வியற்கையரண்களே எடுத்துப் பாராட்டப் பெறுதலும் காண்க. இவ்வரண் முறையினைக் கருத்தில் கொண்டு, எளிதில் கடந்து செல்லலாகாவாறு, எக்காலத்தும் கரை புரண்டு ஓடும் வெள்ளம் உடையவாகிய பேராற்றங்கரைகளிலேயே தங்கள் தலைநகர்களைக் கண்ட தமிழ் நாட்டுப் பேரரசர்கள், அவ்யாறுகள் ஒவ்வொன்றும், ஓரிடத்தே இரண்டாகப் பிரிந்து சிறிது தூரம் ஓடி மீண்டும் ஒன்று கலந்து ஓட உண்டாகும்; திருவரங்கம் போலும் ஆற்றிடைக் குறைகள் எல்லா ஆறுகளிலும் உண்டாதல் இயலாது போவதால், ஆறுகள், நகர்களுக்கு ஒரு சார் அரணாகவே அமைதல் கூடும் என்பதை அறிந்து பிற அரண்களையும் பொருந்தும் வகையால் அமைத்து வைத்தனர்.

அவ்வாறு அமைக்க முனைந்த அவர்கள், அந்நால் வகை அரண்களுள், மலையரண் இயற்கையாக அமைதல் இயலுமே அல்லது, அதைத் தாமே ஆக்குதல் இயலாது என்பதை உணர்ந்து, அதை விடுத்து, ஏனைய அரண்களைத் தாமாகவே படைத்துக் கொண்டனர். நகரத்தின் நாற்புறங்களிலும் காடுகளை வளர்த்தனர்.

காட்டரணை அடுத்து ஆழ்ந்து அகன்ற அகழிகளைத் தோண்டினர். நகரைக் கைப்பற்றும் கருத்தோடு வந்து வளைந்துக் கொள்ளும் பகைப்படை, காவற்காட்டை அழிப்பதிலும், அகழியைத் தூர்ப்பதிலும் முனையும் ஆதலின், அவ்வழிவு நிலை இடம் பெறாதவாறு, அப்பகைப்

படையைத் தலைநகர்ப் புறத்திலேயே போராடி அழிக்க வேண்டும் என்பதே போர் முறையின் தலையாய நெறியாகும் என்பதை உணர்ந்து, புறக்காவல் வீரர்கள் இருந்து பணிபுரியத்தக்க பெருநிலப் பரப்பினை, அகழிக்கும், மதிலுக்கும் இடையே அமைத்தார்கள்.

புறநகர் எனும் பெயருடையதாகிய அப்பெரு நிலப் பரப்பினை அடுத்து, வானளாவ உயர்ந்து மலையெனக் காட்சி அளிக்கும் மதில்களை எழுப்பினார்கள். அம்மதில் அகத்தேதான், அரசன் பெருங்கோயில் முதலாம் மாட மாளிகைகள் நிறைந்த அக நகரை அமைத்தார்கள்.



7. பரியல்—விரைந்து பாயும்.

8. யாழ்—அசை.

9. தொடலை—மாலை; நுடங்கி—அசைய;

10. கிள்ளைத் தெள்விளி—ஆலோலம் என்பது போலும் கிளி ஓட்டும் ஓசை: பயிற்றி: பல கால் ஒலித்து,

12. சிறுகிளி—சிலவே வரும் கிளிகள்; கடிதல்—ஓட்டுதல்; தேற்றாள்—அறியாள்.

14. உறற்கு—அடைதற்கு,

# பொதுவறு சிறப்பின் புகார்

பூம்புகார் எனும் தொடர் அழகிய புகார் நகரம் எனப் பொருள்படும். புகார் எனும் பெயர், பொதுவாகத், துறை முக நகரங்களைக் குறிக்கும் என்றாலும்; அது சிறப்பாகக் காவிரிப்பூம்பட்டினத்தை மட்டுமே குறிக்க வழங்கும். புகார் எனும் பெயர், அது கடற்கரையைச் சேர்ந்த ஒரு நகரம் என்பதை மட்டுமே உணர்த்தும். காவிரிப்பூம்பட்டினம் எனும் அதன் பிறிதொரு பெயர், அது இருந்த இடம் இஃது என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கும். பட்டினம் எனும் பெயர், புகார் என்பதை போன்றே, கடற்கரை ஊர்களை உணர்த்தும் பொதுப்பெயராம்; நாகப்பட்டினம் காயல் பட்டினம், அதிராம் பட்டினம் என்ற பெயர்களை நோக்குக; அப்பெயரின் முன் இணையாக வந்துள்ள காவிரிப்பூம் என்ற தொடர், ஈண்டுக் குறிப்பிடும் பட்டினம், காவிரி கரையில் அமைந்துள்ள, அழகிய நகராகும் என்பதையும் உணர்த்தும்; ஆகவே, காவிரி கடலோடு கலக்குமிடத்தில் அமைந்த அழகிய நகரே, காவிரிப்பூம்பட்டினம் என்பதை, அத்தொடர் தெளிவாக உணர்த்தியவாறு உணர்க.

இமயம் முதல் குமரி வரையுள்ள நாவலந்தீவின் காவற் கடவுளாகிய சம்பாபதி என்பவள், புகார் நகரில் தங்கித் தன் தொழிலாற்றியிருந்தனளாதலின், அப்புகார், பண்டு சம்பாபதி எனும் பெயர் பூண்டிருந்தது அது, அந்நகரை அடுத்துக் காவிரியாறு பாயத் தொடங்கிய

காலம் தொட்டுக் காவிரிப்பூம்பட்டினம் எனும் பெயர் பெற்றது.[1] பரசுராமன் சினத்திற்கு ஆளாகாமல் தப்பிப் பிழைத்த, ஒரே அரசனாகிய ககந்தன் என்பவன் ஒரு காலத்தில், புகார் நகரில் இருந்து அரசாண்டானாதலின், அந் நகர்க்குக் காகந்தி என்ற மற்றொரு பெயரும் உண்டு.[2]

மேலை நாட்டு வணிக மக்களும், உலகை வலம் வந்த பெரியார்களும், காவிரிப்பூம்பட்டினத்தைக், கி.பி. முதல் நூற்றாண்டிலேயே அறிந்திருந்தனர். கி.பி. 81—96ல் எழுதப்பெற்ற "பெரிபுளூஸ் மாரிஸ் எரித்ரியா" நூலில் கொற்கைத் துறைக்கு வடக்கில், 'கடற்கரை நாடு' என்ற கடலைச்சார்ந்த நாடு ஒன்றும், 'அர்கரு' என்ற உள்நாடு ஒன்றும் இருந்தனவாகக்கூறப்பட்டுள்ளது. இவை இரண்டும், முறையே, கடற்கரை ஊராகிய புகாரையும், உள்நாட்டு ஊராகிய உறையூரையும் தலைநகர்களாகக் கொண்டு விளங்கிய இரு சோழ அரசுகளையே குறிப்பனவாம்.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தாலமி என்ற நில நூல் பேராசிரியர், காவிரி கடலோடு கலக்குமிடத்தில் "கபெரீஸ்" எனும் ஓர் ஊர் உளது எனக் கூறியுள்ளார்; அவர் கூறிய ஊர் புகாரே என்பதில் சிறிதும் ஐயமில்லை. கி.பி. முதல் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுதப்பட்ட, "மிலிந்தா அரசனுடைய கேள்விகள்" என்ற பௌத்த நூல், "கடற்கரை நகரங்களுள் சிறந்தது கோளப் பட்டினம்" என்று கூறுகிறது. அது கூறும் கோளப்பட்டினம், சோழர் கடற்கரை நகராகிய புகார் நகரேயாம் எனக் கூறவும் வேண்டுமோ?

புகார், பழமையும் பெருமையும் மிக்க ஒரு மாநகர்; அது, இமயத்தோடும், பொதியத்தோடும் தோன்றிய பழமை வாய்ந்தது; தன்னை என்றும் பிரியாது, தன்னகத்தே வழி வழி வாழ்ந்தபழம்பெரும் குடிகளைக்கொண்டது; வேந்தனும்

விழையும் பெருவளம் மிக்க வணிக மக்களின் வாழ் விடமாயது. வறுமையால் வாடித் தன்னை வந்தடையும் உலக மக்கள் அனைவர்க்கும் வழங்கினும் வற்றாப் பெரு வளம் உடையது. இவை அனைத்திற்கும் மேலாக, ஆன்றவிந்தடங்கிய சான்றோர்களைப் பெற்றது.

'இவ்வாறு ஒரு நல்ல நகருக்கு உரிய சிறப்புக்களில் ஒன்றையும்விடாது, அனைத்தையும் தனக்கே உரியவாகப் பெற்ற புகார் நகரின் அருமை பெருமை அறிந்த பெரியோர் கள், "புகார், பழம் பெருங்காலத்தே தோன்றிப் பாரெலாம் போற்ற வாழ்கிறது." என வாயாரப்பாராட்டுவரேயல்லால், "அது ஒரு காலத்தே பாழாம் எனக் கூறார்" எனப் பாடிப் பாராட்டியுள்ளார் சிலம்பு அளித்த சேரர்குல இளங்கோ.[3]

காவிரியின் வடகரையில் விளங்கிய புகார், மருவூர்ப் பாக்கம், பட்டினப்பாக்கம் என இருகூறாப் பிரிந்திருந்தது. கடற்கரையை ஒட்டியிருந்த பகுதி மருவூர்ப்பாக்கம். அதற்கு மேற்கில் இருந்தது பட்டினப்பாக்கம்; முன்னதைப் புகாரின் புறநகராகவும், பின்னதை இதன் அகநகராகவும் கொள்ளின் பொருந்தும். வாணிகம் புரிந்து பொருள் ஈட்டி வாழும் மத்திய வகுப்பாரும், மெய்வருந்தும் தொழில் புரிந்து வயிறு வளர்க்கும் பிற்பட்ட வகுப்பாரும் குற்றேவல் புரியும் தாழ்த்தப்பட்ட வகுப்பாரும் வாழும் இடம் மருவூர்ப் பாக்கம்; அரசனும், அமைச்சர் முதலாம் அரசியல் துணை வரும், மன்னனும் மதிக்கத்தக்க மாநிதிச் செல்வரும் ஆகிய உயர் வகுப்பார் வாழும் இடம் பட்டினம்பாக்கம்.[4]

மருவூர்ப் பாக்கத்துத் துறைமுகம், பாய்மரக் கம்பத்தில் நாட்டிய தத்தம் நாட்டுக் கொடிகள் காற்றில் அசைய, கட்டிய கட்டுத்தறிகளும் நிலை குலைந்து போமாறு ஓயாது ஆடிக்கொண்டேயிருக்கும் களிறுகள்போல், அலைகளால் அலைப்புண்டு நிற்கும் நாவாய்களால் நிறைந்திருக்கும்.[5]

கரையில் கடலை ஒட்டினாற்போல், வானுலகைத் தாங்கும் கம்பம்போல், ஏணிக் கெட்டா உயர்வுடையவாய்க் கல்லும் சுண்ணாம்பும் கொண்டு கட்டப் பெற்று கூரையிட்டு வேயாத மாடத்தின் மீது, கலங்கரை விளக்குப் பொறுத்தப் பெற்றிருக்கும்; கடல் கடந்த நாடுகளிலிருந்து, கலங்கள் வழியாக வந்து இறங்கிய பண்டங்களும், கலங்களில் ஏற்றி வெளிநாடுகளுக்குக் கொண்டு சென்று வணிகம் புரிய வந்து குவிந்த பண்டங்களும், வரிசை வரிசையாக வகைப்படுத்தி வைத்திருக்கும் பண்டசாலைகள், கலங்கரை விளக்க வேயா மாடத்தை அடுத்துக் கட்டப்பெற்றிருக்கும். பண்டசாலை களுக்குப் பக்கத்தில் ஆயத்துறைகள் அமைந்திருக்கும். மான்கண் போலும், அழகிய சிறு சிறு கோணங்களைக் கொண்ட சாளரங்கள் வைத்துக் கட்டிய மாளிகைகளில் வாழும் அவ்வாயத்துறை அலுவலாளர். ஆங்குக் குவிந்து கிடக்கும் பண்டப் பொதிகளுக்கு உரிய சுங்கங்களைத் தண்டி யும், சுங்கம் இறுத்த பொதிகள் மீது, தம் அரசர்க்குரிய புலி இலச்சினையைப் பொறித்தும், புலி இலச்சினை பொறித்த பொதிகளை, ஆயத்துறைகளை அடுத்திருக்கும் உயர்ந்த மேடைகள் மீது போர் போல் குவித்து வைத்தும், இரவு பகல் ஓயாமல் பணியாற்றிக் கிடப்பர்.[6]

துறைமுகத்தைக் கடந்து, கரைநோக்கிச் சிறிது தூரம் சென்றால், ஆங்கே கடல் வாணிகத்தால் வளம் மிகுந்து செல்லும் விருப்பம் உடையராய் வந்து வாழும் வெளிநாட்டு வணிக மக்களின் வாழிடத்தைக் காணலாம். ஆங்கு வாழ் வார், ஒரே நாட்டிலிருந்து வாரலது, வேறு பல நாடுகளி லிருந்து வந்தவரேயாயினும், ஒரு நாட்டு மக்கள் போல் உள்ளம் கலந்து வாழ்வர். நம் நாட்டு மக்களால், யவனர் என அழைக்கப்பெறும், அவ்வெளிநாட்டு மக்களின் வாழிடம், வளம்பல நிறைந்தது. அவ்வளத்தை ஒரு முறை கண்டார், அவ்விடத்தை விடுத்து வேறிடம் செல்ல விரும்பார், அத்துணை வளம் மிக்கது, அவ்வெளிநாட்டார் வாழிடம்.[7]

யவனர் வாழிடத்தை விடுத்து, அகநகர் நோக்கிச் சென்றுகொண்டேயிருந்தால் பட்டாலும், மயிராலும், பருத்தி நூலாலும் ஆடைகள் நெய்து அளிக்கும் நெசவாளரும் நெல் முதலாம் உணவுப் பொருள்களைக்குவியல் குவியல்களாகக் கொட்டிவிற்கும் கூல வணிகரும், பிட்டு, அப்பம், மது, மீன், வெள்ளுப்பு; வெற்றிலை, இறைச்சி ஆகிய பொருள்களில் வாணிகம் புரிவோரும், கருங்கைக் கொல்லர், வெண்கலக் கன்னார், செம்பு செய்குநர், பொன்செய் கொல்லர், மட்கலம் வனைவார், மரத்தொழில் புரிவார், ஓவியக்காரர், தையல் தொழிலாளர் முதலாய பல்வகைத் தொழிலாளரும், பாணர், குழலர் முதலாம் இசையாளரும், குற்றேவல் புரிவோரும் வாழும் வீதிகளை வரிசையாகக் காணலாம்.[8]

மேலே கூறிய வீதிகள், இரு பக்கத்திலும் வரிசை வரிசையாகப் பிரிந்து கிடக்க, இடையே நீண்ட பெருவீதியொன்று, அகநகரையும், ஆயத்துறையையும் இணைத்துச் செல்லும். நாவாய்கள் கொண்டு வந்து தந்தனவற்றை, நகரின் நடுவே அமைந்திருக்கும் நாளங்காடிக்குக் கொண்டு வரவும், நாவாய்க்கு ஏற்றவேண்டுவனவற்றை, அந்நாளங்காடியிலிருந்து கொண்டு செல்லவும் அப்பெரிய வீதி பயன் பட்டது.[9]

போக்குவரவு மிக்க அவ்வீதியில், மக்கள் மண்டிக் கிடப்பர் ஆதலின், அவ்வீதியில், வண்ணக்குழம்பு, சுண்ணப் பொடி, நறுமணச் சந்தனம், மலர், மணம் தாறும் புகைதரு பொருள்கள் போலும், நாகரீக நம்பியரும், நங்கையரும் விரும்பி வாங்கும் பொருள்களை விற்கும் சிறு வணிகர் கூட்டம் திரிந்து திரிந்து வாணிகம் புரியும்.[10]

மருவூர்ப்பாக்கத்தை விட்டால் வருவது நாளங்காடி; எதிர் எதிராக நிற்கும் இரு படை வீரர்களும் ஒன்று கலந்து போரிடும் இடை நிலம் போல, மருவூர்ப் பாக்கத்து மக்களும்

பட்டினப் பாக்கத்து மக்களும் வந்து, தத்தமக்கு வேண்டும் பொருள்களை வாங்கிச் செல்ல வாய்ப்பளிக்கும் வண்ணம், நாளங்காடி இருபகுதிக்கும் இடையே அமைந்திருந்தது. மரங்கள் நெருங்க வளர்ந்த ஒரு பெரிய தோப்பினிடையே அமைந்த அந்நாளங்காடியில், கடைகல், அம்மரங்களையே தூண்களாகக் கொண்டு, கட்டபெற்றிருக்கும். பொருள்களை வாங்குவோரும்: விற்போரும் எழுப்பும் பேரொலி, அங்கு எக் கரலத்தும் ஒலித்துக் கொண்டேயிருக்கும்.[11]

கடை வீதிகளில்,கடல் கடந்த நாடுகளியிருந்து கலங்கள் ஏற்றிக் கொணர்ந்த விரைந்து ஓடவல்ல குதிரைகளும், கரிய மிளகுப் பொதிகளும், வடநாட்டு மலைபடு பொருள்களாய பொன்னும் மணியும், பொதிய மலையில் விளையும் அகிலும் ஆரமும், பாண்டி நாட்டுக் கடலில் மூழ்கி எடுத்த முத்தும் சோணாட்டுக் கடலில் கிடைக்கும் பவளமும், கங்கைச் சமவெளியினின்றும் வந்த யானை முதலாயனவும் காவிரியாற்றுப் பாய்ச்சலால் விளையும் பல்வகைப் பொருளும், ஈழ நாட்டினின்றும் வந்த உணவுப் பொருளும், பர்மா என வழங்கும் கடாரத்தினின்றும் வந்த கணக்கற்ற பொருளும், அளவு அறியமாட்டாமல் நிறைந்து வளம் மிகுந்து கிடக்கும்.[12]

மகதச் சிற்பரும், மராட்டக் கொல்லரும், யவனத் தச்சரும், கூடிக் கண்ணை கவரும் வனப்புடன் அமைத்த அரசன் பெருங்கோயில் இருப்பது பட்டினப்பாக்கம்; பெரு வாணிகத் தெருவும், மன்னரும் விழையும் மாநிதி படைத்த வாணிகப் பெருமக்களின் மாட மாளிகைகள் நிறைந்த நெடிய வீதியும், வேதம் வல்லமறைவோரும். வேள்குடிவத் தோரும் வாழும் வீதிகளும், அரண்மனையைச் சூழ் அமைந்திருந்தன. மருத்துவரும், நாளறிந்து கூறும் கணியரும் தனித்தனியே வாழும் வீதிகளும், முத்துக் கோப்போர், வளையல் அறுப்போர் நாழிகைக் கணக்கர்,

காவற்கணிகையர், நாடகமகளிர், நகை வேழம்பர் முதலானோர் வாழும் வீதிகளும் ஆண்டே; கடும்பரி கடவுநர் களிற்றின்பாகர், நெடுந்தேர் ஊருநர், கடுங்கண் மறவர் என்ற நாற்படை வீரர்கள் வாழும் வீதிகள் அரண்மனைக்கு அணித்தாகவே அமைந்திருந்தன.[13]

வடவேங்கடம் தென்குமரிகட்கு இடைப்பட்ட தமிழகம் முழுவதையும் தன் ஆணைக்கீழ்க் கொண்டு வந்து அடக்கிய பின்னர், கரிகாலன், வடநாடுநோக்கிச் சென்றான்; சென்றானை இமயம் இடைநின்று தடுத்துவிட்டது. அதனால் சினங்கொண்ட சோழன் அதன் உச்சியில் தன் புலி இலச்சினை பொறித்து மீண்டான்; மீளுங்கால் வச்சிர நாட்டு வேந்தன் முத்துப் பந்தலும், மகத நாட்டு மன்னன் பட்டிமண்டபமும் அவந்தி நாட்டு அரசன் தோரண வாயிலும் அளித்து அவனுக்கு நண்பராயினர்; கரிகாலன் ஆங்குப்பெற்ற அவ்வெற்றிச் சின்னங்கள், காவிரிப் பூம்பட்டினத்திற்குச் சிறப்பளித்து நின்றன.[14]

புகார் நகருக்கு வரும் புதியோர், பொருளின் பெயரும் பொருளுக்கு உரியோர் பெயரும், அப்பொருளின் அளவும் நிறையும் பொறித்துக் கொணர்ந்த பண்டப் பொதிகள்; அவர்கள் ஊர்ப் பொதுவிடத்தே தங்குவதால் காப்பாரற்றுக் கிடப்பக் காணும் கள்வர், அவற்றைக் கவர்ந்து கொண்டால் அவரைக் களவும் கையுமாய்ப் பிடித்துக், களவாடிய பண்டப் பொதிகளை அவர் தலையில் ஏற்றி, நகர் மக்கள் கண்டு நகையாடி வெறுக்குமாறு, நகர வீதியில் வலம் வரப்பண்ணி களவினைக் கனவிலும் கருதாக் கருத்துடையராக்கி அனுப்பும் உயர்நீதி மன்றம் ஒன்றும் அப்புகார் நகரில் இருந்தது.[15]

தண்ணீரில் படித்து மூழ்கித் தன்னை வலம்வரும், கூனர் குறுகிய வடிவினர், ஊமர், செவிடர், தொழுநோயாளர்

முதலாம் கொடிய நோயாளர்களின் நோய் போக்கி நல்லுடல் அளிக்கும் மருத்துவ மாண்பு மிக்க பொய்கையை உள்ளடக்கி நின்ற உயர்ந்த மன்றம் ஒன்றும் ஆங்கிருந்தது.[16]

பகைவரால் வஞ்சிக்கப்பட்டு மயக்க மருந்து ஊட்டப் பெற்றவரும், நஞ்சுண்டு உயிர்போகும் நிலையுற்றோரும் பாம்பின் வாய்ப்பட்டோரும், பேயால் பற்றப்பட்டோரும், வந்து தன்னை வலம்வர, அவர்மீது தன் நிழல்பட்ட அப்போதே அவர் துயர்போக்கி வாழ்வளிக்கவல்ல ஒளியை வீசும் ஒருவகைக்கல் நாட்டப் பெற்ற மன்றம், அந்நகருக்கு மாண்பளித்திருந்தது.[17]

தவநெறியுடையோர்போல் வெளிவேடம் தாங்கிப் பிறர் காணாவாறு பழிபாவம் புரியும் ஒழுக்கநெறி இகந்தோர், கணவன் அறியாவாறு கற்பிழக்கும் காரிகையர், அரசரோடு உடன் வாழ்ந்தே, அவர்க்கு அவர் அறியாவாறு அழிவுதேடும் அமைச்சர், மணந்த மனைவியை மறந்து, பிறர் மனைவியரின் பின் திரிவோர், மன்றில் பொய்ச்சான்று கூறுவார்; ஒருவரைக் கண்டவிடத்துப் புகழ்ந்து, காணா விடத்துப் பழிக்கும் புறங்கூறுவார் போன்ற கொடியோர் களை கைப்பாசத்தால் கட்டி ஈர்த்துக்கொன்று உயிர் போக்குவேன் என, நகரில் நான்கு எல்லையும் கேட்டுமாறு உரத்துக்கூறி, கூறியதோடு நில்லாது அத்தகையாரைப் பற்றி ஒறுத்து அறம் காக்கும் காவல் பூதம் நிற்கும் மன்றம் புகார் நகருக்குப் பெருமையளித்திருந்தது.[18]

ஆளும் முறையை அரசர் மறந்தால், அறநூல் கூறும் நெறிமுறை விடுத்து, ஒருதலை தீர்ப்பளிக்க, அறம் வழங்கும் ஆன்றோர்கள் துணிந்தால், நாட்டில் நிகழும் அக்கேடுகளை நாவால் எடுத்துக் கூறாது, கண்ணீர் வடித்துக் கலங்கிக் காட்டும் பாவையைக் கொண்ட பாவை மன்றம், புகார் நகரின் வாழ்விற்கு அருந்துணை அளித்தது.[19]

புகார் நகரில், காவிரி கடலோடு கலக்குமிடத்தில் சோமகுண்டம், சூரியகுண்டம் எனப் பெயர் பூண்ட இரு பொய்கைகள் இருந்தன; அவற்றில் மூழ்கி, அவற்றின் கரைக்கண் இருந்த காமவேள் கோட்டத்துக் கடவுளை வணங்கினால் மகளிர், கணவரைப் பிரியாது வாழும் பெருவாழ்வை இம்மையில் பெற்று, மறுமையில், போக பூமியில் அவரோடு பிறந்து பேரின்பம் நுகர்வர்.[20]

பூத்து மணம் பரப்பும் தொழில்களால் பொலிவு பெற்றது புகார். மன்னர்க்கு ஏற்றனவும் மக்களுக்கு ஏற்றனவும், மாதவர்க்கு ஏற்றனவும் ஆகிய பூஞ்சோலைகள் பல புகார் நகரில் இடம் பெற்றிருந்தன. வடிவாலும், வண்ணத்தாலும், வாசனையாலும், வேறுபட்ட வகை வகையான மலர் மரங்களைக் கொண்ட இலவந்திகைச் சோலை, அவற்றுள் ஒன்று; அதனிடையே அழகிய பொய்கை ஒன்றும் இருந்தது. அப்பொய்கையில் வேண்டுமளவு நீரை வேண்டும் பொழுது நிறைக்கவும் போக்கவும் வல்ல பொறி பொருத்தப் பெற்றிருந்தது. அத்தகைய மாண்புமிக்க அம்மலர்ச் சோலையில் மன்னர் மட்டுமே மகிழ்ந்து வாழ்வர்.[21]

உவவனம் என்பது புகாரில் இருந்த மற்றொரு பூஞ்சோலை; மக்கள் செல்லும் உரிமை வாய்ந்தது அம்மலர்ச் சோலை. பளிங்கால் ஆன அழகிய மண்டபம் ஒன்று அதன் இடையே இருந்தது. அகத்தே இருப்போரின் வடிவைப் புறத்தே புலப்படுத்தும் அது, ஆங்கு அவர் எழுப்பும் ஒலியை, ஒரு சிறிதும் புறம்போகவிடாது அடக்கிக் கொள்ளவல்லது; அம்மண்டபத்தின் இடையில் புத்தன் பாதம் பொறித்த தாமரைப்பீடம் ஒன்றை அமைத்திருந்தனர்; அப்பீடத்தில் இட்ட அரும்புகள், இட்டவுடனே மலர்ந்து மணம் வீசும்; மலர்கள் வாடா; தேனுண்ணும் வண்டு, அம்மலரை மொய்க்காது; அத்துணை அருமை வாய்ந்தது அப்பூஞ்சோலை.[22]

உய்யானம் எனும் பெயர் பூண்ட, பூதக்காவல் பெற்ற பூஞ்சோலையும், சடாயு எனும் பறவை அரசன் உடன் பிறந்த சம்பாதியின் நினைவாகவும், காவிரியாறு தோன்றத் துணைபுரிந்த கவேரன் எனும் முனிவன் நினைவாகவும் வளர்த்த, சம்பாதிவனம், கவேரவனம் என்ற பூஞ்சோலைகளும், புகார் நகருக்கு பெருமையளித்திருந்தன.[23]

புகார், பலவகைச் சமய மக்களும் கலந்து வாழ்ந்த ஒரு பேரூர்; இதனால் ஆங்கு பல்வேறு சமயச் சார்பான கோயில்கள் சிறப்புற அமைந்திருந்தன; சிவன், திருமால், முருகன், பலராமன், இந்திரன், அவனுக்குரிய வச்சிராயுதம், வெள்ளை யானை அவன் நாட்டுக் கற்பகத் தரு. ஞாயிறு, திங்கள், ஐயன், அருகன் ஆகிய அனைவருக்கும் காவிரிப்பூம்பட்டினத்தார் கோயில் கட்டி விழாச் செய்தனர்.[24]

சக்கரவாளக்கோட்டம் என்ற சிறப்புப் பெயரிட்டு அழைக்கப்பெறும், புகார் நகரத்துப் புறங்காடு, பழக்க வழக்கங்களால் வேறுபட்ட பல இனத்து மக்களுக்கும் ஏற்ற வாறு அமைந்திருந்தது. அப்புறங்காடு, அந்நகர் வாழ் மக்களின் நாகரீக வளர்ச்சிக்கேற்ப வாய்ப்பும் வனப்பும் பொருந்தியிருந்தது.[25]

மழை வளம் குறையாப் பெரிய மலையில் தோன்றி, வெள்ளம் பெருக்கெடுத்தோடப் பாய்ந்து வரும் பெரிய பெரிய ஆறுகள்போல், உலக மக்களெல்லாம், ஒருங்கே விரைந்து நுழையவல்ல உயர்வும் அகலமும் உடைய, புகார் நகரத்துப் புறவாயில்கள். அவற்றுள், காவிரியாற்றுக்குக் கொண்டு விடும் மேற்றிசை வாயிலுக்குப் போகும் வழியின் இரு மருங்கும், நிழல் தரு மரங்களை வரிசையாக வளர்த்திருந்தனர்.[26]

காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையின் மாலைக் காட்சி மனம் நிறையும் மகிழ்ச்சிதரும் மாண்புடையதாகும். கடல் கடந்த நாடுகளினின்றும் வந்து வாழும் வணிக மக்கள் கடற்கரை மணல்மீது, வகை வகையான பொருள்களை வரிசை வரிசையாக பரப்பி வைத்து, விலையை வாயாற்கூறாது, எல்லோரும் காண எழுதி வைத்து வாணிகம் புரிந்திருப்பர்.

அக்கடற்கரையில், மாலைக் காலத்தில் ஏற்றும் விளக்குகளை எண்ணிக் காணல் எவர்க்கும் இயலாது; சுண்ணம் முதலாம் வாசனைப் பொருள்களை விற்பவர் ஏற்றிய விளக்குகளும், பொற் கொல்லர் முதலாம் பல்வேறு தொழிலாளர்கள், தங்கள் தங்கள் தொழில் நிலையங்களில் ஏற்றிய விளக்குகளும், அப்ப வணிகரும், பிட்டு வணிகரும் குடத்தண்டுகள் மீது ஏற்றி வைத்த விளக்குகளும், பல்வகைப் பண்டங்களையும் விலை கூறி விற்கும் மகளிர், தம் கடைகளில் ஏற்றிய விளக்குகளும், கரையில் இருந்தவாறே,கடலில் செல்லும் கலன்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்கும், கடல் மேல் சென்று மீன் பிடித்து வாழும் பரதவர், தாம் ஏறிச் செல்லும் திமில்களில் ஏற்றிய விளக்குகளும், வெளி நாட்டு மக்கள், தம் மாடங்களில் ஏற்றிய மணி விளக்குகளும், பண்டப் பொதிகளை காத்துக் கிடக்கும் காவலர், அப்பண்டப் பொதிகளை சுற்றி ஏற்றி வைத்த விளக்குகளும் ஒன்று கூடி, கடற்கரை வெண்மணலில் வீழ்ந்த வெண்சிறு கடுகையும் எளிதில் எடுக்கவல்ல பேரொளி வீசிக் காவிரிப் பூம்பட்டினத்துக் கடற்கரையைக் கண்ணொளிகெடுக்கும் ஒளியுடையதாக்கிக் கவின் அளிக்கும்.[27]

ஆன்றோர் உண்மையால் அழியாது எனப் பாராட்டப் பெற்ற புகார் அழிந்து விட்டது. "என்னை குறித்து எடுக்கும் விழாவைப், புகார்நகர் மக்கள் என்று மறுக்கின்றனரோ, அன்றே அந்நகர் அழியும்" என்று இந்திரன் ஒரு

சாபம் அளித்திருந்தான். கடல் கடந்த நாட்டில் பிறந்து, கலம் ஏறித் தன்னை நோக்கி வந்த தன் மகன் இடைவழியில் கலம் கவிழக் கடலில் வீழ்ந்து காணாது போயினன் என அறிந்த புகார் நகர் வேந்தன் வடிவேற் கிள்ளி, வருத்த மிகுதியால் விழா வெடுக்காது விடுத்தனாகப் புகாரைக் கடல் விழுங்கிற்று.[28] இந்திர சாபம் உண்டோ, இல்லையோ புகார் இன்று இல்லை, அன்று புகார் இருந்த இடத்தில் இன்று, கடல் தன் ஆட்சி செலுத்துகிறது; புகார் மறைந்த மாநகரமாகி விட்டது.

## சான்றெண் விளக்கம்

1. சம்பு என்பாள் சம்பாபதியினள்
செங்கதிர்ச் செல்வன் திருக்குளம் விளக்கும்
கஞ்ச வேட்கையின் காந்தமன் வேண்ட
அமர முனிவன் அகத்தியன் தனாது
காகம் கவிழ்த்த காவிரிப்பாவை .....
என் பெயர்ப்படுத்த இவ்விரும்பெயர் மூதூர்
நின்பெயர்ப் படுத்தேன் நீவாழிய என"
—மணிமேகலை : பதிகம் :8—31

2. "ககந்தன் காத்தல் காகந்தி என்றே
இயைந்த நாமம் இப்பதிக்கு இட்டு"
—மணி : 22 : 37—38

3. "பொதியிலாயினும், இமயமாயினும்,
பதியெழுவு அறியாப் பழங்குடி கெழீஇய"
சிலம்பு : 1 ; 14—19

4. "பொதுவறு சிறப்பின் புகாரே ஆயினும்
நடுக்கின்றி நிலைஇய என்பது அல்லதை
ஒடுக்கம் கூறார் உயர்ந்தோர் உண்மையின்,
முடிந்த கேள்வி முழுதுணர்ந்தோரே"
—சிலம்பு : 1 : 16—19

"உரைசால் சிறப்பின் அரைசுவிழை திருவின்
பரதர்மலிந்த பயங்கெழு மாநகர்,
முழுங்கு கடல் ஞாலம் முழுவதும் வரினும்
வழங்கத் தவாஅ வளத்தது"
—சிலம்பு : 2 : 1—4

5. 'வெளில் இளக்கும் களிறுபோலத்
தீம்புகார்த் திரை முன்துறைத்
தூங்கு நாவாய் துவன்றிருக்கை
மிசைக்கூம்பின் அசைக்கொடி"
—பட்டினப்பாலை ; 172—175

6. வேயாமாடமும், வியன்கல இருக்கையும்,
மான்கண் காலதர் மாளிகை இடங்களும்"
—சிலம்பு 5:7-8

"நல் இறைவன் பொருள் காக்கும்
தொல் இசைத் தொழில் மாக்கள்...
வைகல்தொறும் அசைவு இன்றி
உல்குசெய...........
நீரினின்று நிலத்து ஏற்றவும்
நிலத்தினின்று நீர் பரப்பவும்
அளந் தறியாப் பல பண்டம்
வரம் பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங் காப்பின்

வலியுடைவல் அணங்கின் நோன்
புலி பொறித்துப் புறம் போக்கி
மதி நிறைந்த மலி பண்டம்
பொதி மூடைப் போர்''

—பட்டினப்பாலை 120-137

7. ''கயவாய் மருங்கில் காண்போர்த் தடுக்கும்
பயன் அறவு-அறியா யவனர் இருக்கையும்
கலம்தரு திருவின் புலம் பெயர் மாக்கள்
கலந்திருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்''

—சிலம்பு 5:9-12

8. —சிலம்பு ; 5:16-39

9. மகர வாரி வளம் தந்து ஓங்கிய
நகரவீதி''

—சிலம்பு 6;128-129

10. ''வண்ணமும் சுண்ணமும் தண் நறும் சாந்தமும்
பூவும் புகையும் மேவிய விரையும்
பகர் வளர் திரிதரும் நகரவீதி''

—சிலம்பு 5;43-15

11. ''இரு பெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியின் இடைநிலமாகிய
கடைகால் யாத்த மிடைமரச் சோலை
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்
நடுக்கின்றி நிலை இய நாளங்காடி''

—சிலம்பு 5:59-63

12. "நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்
காலின்வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்,
கங்கை வாரியும், காவிரிப் பயனும்
ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்,
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி.
வளம் தலை மயங்கிய நனந்தலை மறுகு"
—பட்டினப்பாலை 185-193

13. —சிலம்பு : 5,40-58

14. "மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோன் இறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபின் தோரண வாயிலும்"
—சிலம்பு 4:5:99-104

15. வம்பமாக்கள் தம் பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த, எண்ணுப் பல் பொதிக்
கடைமுக வாயிலும் கருந்தாழ்க் காவலும்
உடையோர் காவலும் ஓரீ இயவாகிக்
கட்போர் உளர்எனின், கடுப்பத் தலை ஏற்றிக்
கொட்பினல்லது கொடுத்தல் ஈயாது
உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றம்"
—சிலம்பு ; 5: 111—117

16. "கூனும் குறளும் ஊமும் செவிடும்
அழுகு மெய்யாளரும் முழுகினர் ஆடிப்
பழுதில் காட்சி நன்நிறம் பெற்று
வலம் செயாக் கழியும் இலஞ்சி மன்றம்"

சிலம்பு : 5:118—121

17. வஞ்சம் உண்டு மயற்பகை உற்றோர்,
நஞ்சம் உண்டு நடுங்குதுயர் உற்றோர்:
அழல்வாய் நாகத்து ஆர்எயிறு அழுந்தினர்.
கழல் கண் கூளிக் கடுநவைப் பட்டோர்
சுழல வந்து தொழத் துயர்நீங்கும்
நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றம்"

சிலம்பு : 5: 122—127

18. "தவம் மறைந்து ஒழுகும் தன்மை இலாளர்,
அவம் மறைத்து ஒழுகும் அலவற் பெண்டிர்,
அறைபோகு அமைச்சர், பிறர் மனை நயப்போர்
பொய்க் கரியாளர், புறங் கூற்றாளர் என்
கைக்கொள் பாசத்துக் கைப்படுவோர் எனக்
காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூதசதுக்கம்"

சிலம்பு ; 5 : 128—134

19. "அரைசு கோல் கோடினும், அறம்கூறு அவையத்து
உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்
நாவொடு நவிலாது, நவைநீர் உகுத்துப்
பாவைநின்று அழூஉம் பாவை மன்றம்"

சிலம்பு : 5 : 135—138

20. "கடலொடு காவிரி சென்றலைக்கும் முன்றில்
மடல் அவிழ் நெய்தலங்கானல் தடம்உள

சோம குண்டம், சூரிய குண்டம், துறைமூழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார், கணவரொடு
தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார்
போகம்செய் பூமியிலும் போய்ப் பிறப்பர்"
—சிலம்பு ; 9 : 57—62

21. "உயர் கோட்டத்து
முருகு அமர்பூ முரண்கிடக்கை
வரியணி சுடர் வான் பொய்கை
இருகாமத்து இணை ஏரி"
பட்டினப் பாலை : 36—39

"மலய மாருதம் மன்னர்க்கு இறுக்கும்.
பன்மலர் அடுக்கிய நன் மரப்பந்தர்
இல வந்திகை"
சிலம்பு : 10; 29—31

22. "இலவந்திகையின் எயிற்புறம் போகின்,
உலக மன்னவன் உழையோர் ஆங்குளர்.
மணி ; 3: 45—46

"உவவனம் என்பது ஒன்று உண்டு; அதன் உள்ளது
விளிப்பு அறை போகாது, மெய்புறத்து இடூஉம்
பளிக்கறை மண்டபம் உண்டு; அதன் உள்ளது
தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த
தாமரைப் பீடிகை தாமுண்டு; ஆங்கு இடில்
அரும்பு அவிழ்செய்யும்; மலர்ந்தன வாடா;
சுரும்பினம் மூசா"
மணி : 3 ; 62—68

23. மணி : 3 : 49—58

24. சிலம்பு : 5 : 169—172; 9; 9—13

25. மணி : 6: 37—202.

26. சிலம்பு 10 : 26 —27; 32—33

27. "..............................விளக்கமும்
எண்ணும் வரம்பு அறியா இயைந்து ஒருங்கு
ஈண்டி
இடிக்கலப்பு அன்ன ஈர்அயிர் மருங்கில்
கடிப்பகை காணும் காட்சியது ஆகிய"
—சிலம்பு ; 6 : 144—147

28. 'மன்னவன் மகனுக்கு உற்றது பொறாஅள்
நன் மணிஇழந்த நாகம் போன்று
கானலும் கடலும் கரையும் தேர்வுழி
வானவன் விழாக்கொள் மாநகர் ஒழிந்தது;
மணிமேகலா தெய்வம் மற்றது பொறாஅள்
அணிநகர் தன்னை அலைகடல் கொள்கென
விட்டவள் சாபம்; பட்டது இதுவால்"
மணி : 25 : 194—200





இருபதாம் நூற்றாண்டுத் தமிழகத்தின் வரலாற்றில் தனக்கென ஒரு சிறப்பிடத்தைப் பெறத்தக்க வகையில் நல்ல தமிழ் அறிஞராக, வரலாற்றுத் திறனாய்வாளராக, செந்தமிழ்ப் பேச்சாளராக, இலக்கியப் படைப்பாளராக, பாதை மாறாத பகுத்தறிவுவாதியாக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக, தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் தலைவராக, எனப் பல்திறன் படைத்த நற்றமிழ்ப் புலவராக விளங்கியவர்,

புலவர். கா. கோவிந்தனார் அவர்கள்.

"தமிழுக்கும், தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ் நாட்டுக்கும் தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்" என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப் பெற்று, திருவண்ணாமலை குன்றக்குடி ஆதினத்தாரின் 'புலவரேறு' பட்டம், தமிழக அரசின் 'திரு. வி. க. விருது', மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் 'தமிழ்ப்பேரவைச் செம்மல்' பட்டம் போன்ற சிறப்புகளையும் பெற்ற புலவர் அவர்களின் தமிழ்ப்பணி பொன்விழாக் கண்ட பெருமையினையுடையது.

ISBN—81-85703-16-7